# மாங்கனி

(முத்தமிழ்க் காப்பியம்)

கவிஞர் கண்ணதாசன்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

இரண்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 1970
மூன்றும் பதிப்பு : 1973
நான்காம் பதிப்பு : ஜூலை, 1975
ஐந்தாம் பதிப்பு : 1978
ஆறும் பதிப்பு : நவம்பர், 1981
ஏழாம் பதிப்பு : செப்டம்பர், 1984

திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை ரூபாய் ஆறு

அச்சிட்டோர்,
மூவேந்தர் அச்சகம்
சென்னை-14

# ஆசான் அணிந்துரை

செந்தமிழின் நவமணிகளை அள்ளித்தெளித்துத் தங்கத் தமிழ்ப் பாவில் இழைந்தோடவிட்ட அழகிய நாடகக் காப்பியம் இது. ஆங்காங்கு கவிதை சோலையாக, தென்றலாக மிளிர்கிறது. ஆனால், அவ்வப்போது கவிதை காடாக, புயலாகச் சுழித்தடித்தார்க்கின்றது. வரலாற்றுடன் இணைந்த இந்தப் புனை ஓவியம் சந்தக் கவிதைக்குச் சந்தம் தருகிறது. கவிஞர் கண்ணதாசன் எழிற்கலைக்குத் தலைசிறந்த முதிர்ச்சி உண்டு என்பதைத்,

'' தென்றல் வந்து போனதற்குச் சுவடு ஏது?''

'' விரிக்காத தோகை மயில், வண்டு வந்து
மடக்காத வெள்ளை மலர் ! நிலவு கண்டு
சிரிக்காத அல்லி முகம் ! செகத்தில் யாரும்
தீண்டாத இளமை நலம், பருவ ஞானம்''

என்பன போன்ற பல பகுதிகள் தெற்றென விளக்குகின்றன.

வாழ்க கவிஞன் புனைவு வெள்ளம் !
வளர்க அவன் கலைவளம் !

கா. அப்பாதுரை

## அழகிய முத்துக்கள்

மக்களும், பேராசிரியர்களும் பெரும் புலவர்களும் மதிக்கின்ற எழுத்துக்கள் கவிஞர் கண்ணதாசனின் எழுத்துக்கள். அவை தமிழ்நாட்டின் தனிப்பெருஞ் சொத்துக்கள்! அழகிய முத்துக்கள்.

கவிஞர் எழுதிய காவியங்களில் மாபெரும் பாராட்டுப் பெற்ற காவியம் மாங்கனி! கிடைப்பதற்கு அரிதான மாங்கனியைத் தமிழ் மக்களுக்கு— தமிழ் உள்ளங்களுக்குப் புதிய வடிவில் வழங்குவதில் வானதி பெருமை கொள்கிறது!

கருத்து நிறைந்த அழகுத் தமிழ்க் காவியம் மாங்கனி! இது மக்கள் மனதைச் சுகப்படுத்தும். பதப்படுத்தும்! பண்படுத்தும்!

—ஏ. திருநாவுக்கரசு

## முதற்பதிப்பு முன்னுரை

1954-ஆம் ஆண்டு மார்ச் மாதம் கல்லக்குடி வழக்கிலே தண்டிக்கப்பட்ட நானும் நண்பர்களும் திருச்சி மத்திய சிறையிலே வைக்கப்பட்டிருந் தோம். அப்போது, அங்கே உருவானதுதான் இந்தக் காவியம்.

காவியம் எழுத வேண்டுமென்ற ஆசை வெகு நாட்களாகவே எனக்கு உண்டு. மிகவும் அமைதி யான சூழ்நிலை இருந்தாலொழிய ஓரளவுக்காவது சுவை பயக்கும் காவியத்தைப் புனைய முடியாது என்பதும் என் நம்பிக்கை. ஆகவே, என் ஆசை ஆசையாகவே இருந்தது; நிறைவேற வழியில்லை. சிறைச்சாலை அந்த வாய்ப்பை எனக்குத் தந்தது. என் ஆசையை வளர்த்தார்கள், உடன் சிறை இருந்த அன்பில் தர்மலிங்கம், கலைமகள் இராதா கிருஷ்ணன், ஐ. எம். ஷரீப், தஸ்தகீர், ராம்தாஸ், வேலூர் சதாசிவம் முதலிய நண்பர்கள். எழுது வதற்கு எண்பது பக்க நோட்டுக்கள் இரண்டை வாங்கித் தந்தார் நண்பர் அன்பில் தர்மலிங்கம். நாள் ஒன்றுக்கு ஒரு மணி நேரம் எடுத்துக் கொண்டு எழுதிச் சரியாக ஆறே நாட்களில் இதை

முடித்தேன். மேற்கண்ட நண்பர்களுக்கு என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்தக் காவியத்திற்குக் கருவாய் அமைந்த கதையில் ஒரு பகுதி வரலாற்றுச் சான்று கொண்டது. மோரிய மன்னன் அறுகையோடு மோகூர்க் குறுநிலப் பாண்டியன் பழையன் என்பான் பகைமை பாராட்டியதாகவும், அறுகைக்கு உதவியாகச் சேரன் செங்குட்டுவன் பழையன் மீது போர் தொடுத்ததாகவும் காணப்பட்ட ஒரு குறிப்பை வைத்துத்தான் இதைப் புனைந்தேன். அமைச்சர் அழும்பில் வேளுக்கு ஒரு மகன் இருந்ததாக வரலாற்றிலே இல்லை; ஆனால், நான் படைத்துள்ளேன். திரு. மு. ராகவய்யங்காரின் குறிப்புப் படி சேரன் செங்குட்டுவன் படை எடுத்துச் செல்லுமிடங்களுக்குக் கணிகையர் சிலரும் அழைத்துச் செல்லப்படுவதுண்டு என்பது தெரிய வந்தது. அதிலே ஒருத்தியாக என் கற்பனையில் பிறந்தவள்தான் இக்காவியத்தின் நாயகி. தென்னரசியும், பொன்னரசியும் நான் படைத்த பாத்திரங்களே. காதல் சம்பவங்கள் கற்பனைதான்.

சிறையிலே எழுதியதற்குமேல் அதிகம் ஒன்றும் சேர்க்காமலேயே இதனை வெளியிடச் செய்திருக்கிறேன். இலக்கண வரம்பை உணர்ச்சி தாண்டியபோது நான் குறுக்கே நிற்கவில்லை. ஆகவே, இந்தக் காவியத்தில் காணப்படும்

''சட்டத்தை மீறிய குற்ற''ங்கள், வேகமாக ஓடிய என் உணர்ச்சியின் விளைவுகளே. காய முனையும் புலவர்கள் மன்னிக்க; நிற்க.

இந்தக் காவியத்தின் ஒரு பகுதியை ஏற்கனவே 'தென்ற'லில் வெளியிட்டுள்ளேன். படித்தவர்கள் ரசித்ததாகக் கடிதங்கள் வரப்பெற்றேன்; இப்போது முழுக் காவியத்தையும் இதோ பார்க்கிறீர்கள். இரண்டு ஆண்டுகள் ஓய்வெடுத்துக் கொண்டு இப்போதுதான் இது புத்தக வடிவில் வருகிறது.

எனது ஆசிரியரும் ''அப்பா'' என்று எங்களால் அன்பாக அழைக்கப்படுபவரும், கல்விக் கடலும் கருணையின் வடிவமுமான **பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார்** அவர்கள் இதனைச் சரி பார்த்து அணிந்துரையும் தந்து உதவினார்கள்.

இது என் கன்னி முயற்சி; சுவைப்பவர்கள் பிழை காண்பவர்கள் அனைவரது கருத்துக்களையும் நான் எதிர்பார்க்கிறேன்.

**வாழ்க தமிழ் ! வாழ்க திராவிடம் !**

அன்பன்

**கண்ணதாசன்**

மறைந்த என் தந்தை

அழ. சாத்தப்பர் நினைவுக்கு

இது

படையல்

பெற்று வளர்த்து, 'முத்'தென்று
பெயரிட் டழைத்துச் ''சில காலம்
கற்றுவா'' வென் றொரு பள்ளிக்
கடலுக் கனுப்பிப் பின்னாளில்
முற்றும் என்பால் உயிர்வைத்து
முகிழ்க்கும் புகழில் மகிழ்வாகிக்
கற்றோர் துணையில் 'தம்பி' வரக்
கண்டார்; மாண்டார்; அவர்க்கீது!

அழ. சா. முத்தையா
என்ற
கண்ணதாசன்

## நூலினுள்ளே

## தமிழ் வாழ்த்து

தனைப்புகழத் தன்னிடத்தோர் சொல்லில் லாத
தமிழே,என் தாயேநின் பாதம் போற்றி,
மனத்துள்எழும் சிற்றுசை முதலாய்க் கொண்டு
வடித்திடுமென் சிறுகவிக்குத் துணையாய் நின்று
நினைப்பில்எழும் அத்தனையும் வடிவம் இன்றி
நிழலாகத் தோன்றிடினும் சிறிய நெஞ்சின்
நினைப்பினுக்கு மதிப்பீந்து வாழ்த்து! உந்தன்
நிழல்கண்ட யானும்உனை வாழ்த்து கின்றேன்.

# 1

## வஞ்சியில் விழா

பழியுரைத்த ஆரியரை வென்றி கண்டு
பத்தினியின் சிலைசமைக்கக் கல்லெ டுத்து
இழிகுணத்தார் தலையேற்றிக் கொணர்ந்த நாளை
எங்கோமான் சேரர்தகை விழவாய்க் கண்டான்.

வஞ்சியிலும் வெளிப்புறத்தும் நாடு முற்றும்
வற்ருத கலையழகே திகழ்ந்த தந்நாள்!
கொஞ்சுமெழில் நாட்டவர்கள் ஒன்ருய்க் கூடிக்
கொற்றவன்செங் குட்டுவனை வாழ்த்து கின்ருர்.

கனகனைப்போல் பொம்மையினைச் செய்து, அஃதைக்
கணைவீச்சால் இரண்டாக வீழ்த்திக் காட்டிப்
பனைமரம்போல் விசயன் அதன் பக்கம் வந்து
பரிதாப மாய்நிற்க உருச்ச மைத்தார்!

"புல்லன்றி வில்லறியாப் புல்லர் கூட்டம்
புத்தியின்றிச் சொல்லுகின்ற சொல்லால் என்றும்
கல்சுமக்க வரும்" என்னும் கருத்த மைந்த
கவிதையினைப் பாடிஅவர் ஆடு கின்ருர்.

இடையினிலே வாளோடும் ஆண்கள் கூட்டம்
எழில்சிரிக்கும் முகத்தோடும் மாதர் கூட்டம்
நடையினிலே ஆடவர்கள் சிம்மம் போலும்
நங்கையர்கள் அளந்துவைக்கும் அன்னம்போலும்!

பருவத்தின் முதற்படியில் மலர்ந்த பூவில்
பக்குவமாய்க் கட்டியமென் மாலை யன்ன
உருவத்தில் ஒளிசிதறி அங்குமிங்கும்
ஒய்யார நடைநடந்தார் மாத ரெல்லாம்!

தேரில்லை; சிலையில்லை; தேங்கா யில்லை!
தெய்வத்தைச் செவிடாக்கும் 'தேவ' ரில்லை!
ஊரெல்லாம் நாடெல்லாம் திருநாள் கண்டார்!
உற்சாகம்! வீரர்க்கு விழாவெ டுத்தார்!

எப்புறத்தும் எவ்விடத்தும் இன்பக் காட்சி
எழுகோடிக் கண்ணேனும் கொள்ளாக் காட்சி
முப்புறத்து வேந்தர்களும் ஒன்றாய் வந்து
முதன்முதலாய் வஞ்சிதனிற் சேர்ந்த நன்னாள்!

ஆரியர்தம் படைகடந்த நெடுஞ்செழியன்
அறம்பிறழா மணக்கிள்ளிச் சோழ னோடும்
காரியாற்றுத் துஞ்சுநெடுங் கிள்ளி யோடும்
கலைவாணர் பரணருமங் கிருந்தா ரன்று!

"நாம்மூவர் ஆனாலும் ஒரும னத்தார்!
நாட்டினில்வே றானாலும் ஓர்இ னத்தார்!
தேன்பாய்ந்த செந்தமிழே சேர்கு ணத்தார்!
திசையினிலே உலகிற்குத் தென்பு லத்தார்!

வென்றிகொளல் சேரரெனில் எமக்கு மஃதே
வீரத்தில் நாமெல்லாம் ஒருபா லன்றோ?
என்றவர்வாய் சொல்லாமல் விழிகள் காட்டும்;
இணையற்றோம் நாமென்று மலர்ச்சி கூட்டும்!

தென்பாங்கில் முழக்கொலிகள் வானை முட்டும்!
சிறுவெடியும் பெருவெடியும் இடிபோ லெட்டும்
பொன்பூவில் மணமேது என்பார், அன்று
போயிருந்தாற் பொன்பூவும் மணத்தல் காண்பார்.

முத்தனைய தென்மக்கள் கூடிக் கூடி
மூண்டிருக்கும் மகிழ்ச்சியினில் ஆடிப் பாடிக்
கத்துகடல் போல்வீதி காணு நாளில்
கனிவுமிகும் சேரர்அவைக் காட்சி காண்பாம்!

## 2

## சேரன் அவையில்...

வாள்பட்டால் கூர்மழுங்கும் வலிமை மிக்க
மார்பகத்திற் பொன்மணிகள் தொட்டி லாட
பாழ்பட்டார் பகைவரெனக் கூறும் கண்கள்
பளபளக்க வீற்றிருந்தான் சேரர் கோமான்!

சுற்றிலும்மெய்ப் புன்னகையிற் சுழலும் மக்கள்!
துயிலாத நெஞ்சத்தார் புலவ ரெல்லாம்
முற்றிலுமே தமைமறந்து மூழ்கி விட்டார்;
முடிவேது, புகழ்ப்போதை மீறி விட்டால்

"மாங்கனிஎங் கே?" என்ருன் சேரர் தந்தை
வாயெல்லாம் விழியெல்லாம் மூடா ராகித்
தீங்கனியைத் தேடிநின்ருர் அவையோ ரெல்லாம்
செங்கனிவாய்க் கோலமயில் வந்தாள் மெல்ல!

மின்வெட்டுக் கண்கட்ட மேவி ஞற்போல்
மென்பட்டுப் பூங்குழலி பூமி தொட்டுப்
பொன்கட்டிச் சிலைபோல ஊர்ந்து வந்தாள்;
புத்தியெலாம் அவளானுர் அவையி ருந்தோர்!

தனை மறந்து ஒருபுலவன் எழுந்தான்; சேரத்
தண்ணளியான், 'கவிமணியே, என்ன?' என்ருன்.
'எனை மறந்தேன் பாப்பொழிய எண்ணி விட்டேன்,
இப்பொழுதே தருகின்றேன்' என்ருன்; சொன்னுன்:

(வேறு)

"கொலைவாளுக் குறைபோல விழிவாளுக் கிமையும்
குழையாடுஞ் செவியோடு உறவாடும் அளவும்
சிலையோடும் சமமாக விளையாடும் புருவம்
சிறுவானப் பிறைமீது அலைமோதும் அழகும்
கலைமூடும் எழிலேனும் காண்பார்தம் நெஞ்சம்
கடல்மீனுக் கிணையாகத் தடுமாறும் நிலையில்
வலைவீசும் உருவேநின் வடிவொன்று போதும்
வாழ்வார்உன் ஞேடென்னின் வாழ்வார்எப் போதும்"

(வேறு)

என்றந்தப் பாவாணன் இடத்த மர்ந்தான்
இளநகையிற் கைதட்டிச் சேரன் சொல்வான்;
"தென்சந்தப் பாப்பாடி நடனம் ஆடு,
தேன்மொழியே, தமிழ் நாட்டார் மகிழ்வு காண!

விரிக்காத தோகைமயில்! வண்டுவந்து
மடக்காத வெள்ளைமலர்! நிலவு கண்டு
சிரிக்காத அல்லிமுகம்! செகத்தில் யாரும்
தீண்டாத இளமைநலம் பருவ ஞானம்!

காற்றுக்கு முருங்கைமரம் ஆடல் போலும்.
கடலுக்குள் இயற்கைமடி அசைத்தல் போலும்
நாற்றுக்குள் இளங்காற்று நடித்தல் போலும்
நல்லோர்தம் அவைக்கண்ணே நடன மிட்டாள

செம்பருத்திப் பூப்போலும் உள்ளங் கையும்
செங்காந்தள் ஐந்தன்ன விரலும் காட்டி
அம்பெடுத்து வில்லேற்றித் தொடுத்து விட்டு
ஆடுகிருள், பிணமாக அவையோ ரங்கே!

ஏழிசைதான்! அதற்குள்ளே என்ன இன்பம்!
எழில்உருவம்! அதிலேயோ புவிய டக்கம்!
வாழையெனும் பெண்மரமே அவைக்கு வந்து
வட்டமிடும்? என்னஇது! புவனந் தாஞ?

தெந்தமித்தீம் என்றவளும் ஆடு கின்ருள்,
'செத்தொழிந்தேன்' என்றுசிலர் வாடு கின்ருர்;
தந்தனத்தான் என்றவளும் தாவு கின்ருள்;
'தஞ்சமுற்றேன்' என்றுசிலர் மேவு கின்ருர்.

பொழுதேறல் அறியாத அவையோ ரெல்லாம்
பொன்னமுதின் 'மங்களத்'தால் கண்தி றந்தார்!
எழுதாத ஓவியத்தை அருக ழைத்தே
எழிற்செல்வி வேண்மாள்நற் பரிசு ஈந்தாள்!

மாங்கனியே மெல்லவந்து வாங்கிக் கொண்டாள்
வாழ்த்தியசெங் குட்டுவன்சொற் புகழ்ந்து சொன்ஞன்
ஆங்கிருந்த யாவோரும் விடை கொண்டேக
அமைச்சர்மகன் மட்டுமசை யாமல் நின்ருன்

அழும்பில்வேள் சேரர் தம் அமைச்ச ஞவான்!
அவன்செல்வன் அடலேறு சேஊ வீரன்!,
செழுங்கொடியைக் கண்வாங்கி மனத் துட் போட்டு
சீரணிக்க முடியாமல் நின்ருன் ஆங்கே!

மூட்டைமுடிச் சத்தஊயும் கட்டிக் கொண்டு
முதிர் தாயின் பின்னந்த முல்ஊ சென்ருள்
வேட்டையிலோர் புலிவீழ்ந்த தறியாள் அன்ளுள்!
வேடர்குணங் கொண்டங்கு வராத தாலே!

போனவளின் பின்ஞலே மெல்லப் போஞன்!
புதுமனதின் முதற்கூச்சம் இழுக்கக் கண்டு
ஆஊயசைங் தாடுதல்போல் முன் னும் பின் னும்
அசைந்தபடி நின்றதலால், தொடர்ந்தா னில்ஊ!

சித்திரத்தாள் அடிச்சுவட்டைத் தேடிப் பார்த்தான்
தென்றலது போனதற்குச் சுவடு ஏது?
கைத்திறத்தால் தரைதடவிப் பார்த்து அன்ளுள்
கால்பட்ட இடத்திலிளஞ் சூடு கண்டான்!

பித்துமனம் நிஊயழியப் பெருமூச் சோடு
பேரரசைத் தோற்கடித்த வாஊப பார்த்தான்!
"குத்திடுவேல் வாளெல்லாம் களத்தி லேதான்;
கோதையர்பால் துரும்பேதான்" என்ருன், போஞன்.

## 3

## வெள்ளி மாடத்தில்

வேந்தனின் தனிஇருக்கை
வெள்ளிமா டத்தின் கண்ணே
சாந்தமே உருவாய் நின்ற
தளிர்க்கொடி வேண்மா ளோடும்
காந்தமாய் நின்ருன் சேரன்
கவலையே அறியா ஞகி
மாந்தர்தம் காலம் முற்றும்
மறக்கொணு வடிவத் தோடும்.

மாங்கனி அழகைப் பற்றி
மடக்கொடி வேண்மாள் சொல்ல,
"ஈங்கது வேண்டாம் கண்ணே
இன்ெருரு பெண்ணிற் சிந்தை
தீங்குதான், அழகைப் பற்றிச்
சிந்தனை போதும்!" என்ருன்,
தாங்கிய கையில் வேண்மாள்
தண்முகம் சிலிர்த்து நிற்க!

பெருமையில் வேண்மாள் சற்றுப்
பெருத்தனள்! கணவன் உள்ளத்(து)
அருமையை எண்ணி எண்ணி
அயிர்த்தனள்! அழகு மிக்க
உருவினன்; வசதி யெல்லாம்
உள்ளவன்; ஒழுக்கந் தானே
பெருமையாம் வேண்மாள் கண்கள்
பெருக்கின அன்புக் கண்ணீர்.

## 4

## போதை நெஞ்சம்...

விழியிருக்கும் ஒளியின்றி, விரிந்த நெஞ்சு
வெளியிருக்கும் நினைவின்றி, வாய்வடித்து
மொழிபிறக்கும் தொடர்பின்றிக் காதல் ஒன்றே
மூண்டிருக்கும் உருவானுன் அமைச்சர் மைந்தன்!

''தலையிருக்கும் பாரத்தை இறக்கி வைக்க
வழியிருக்கும் சாலைதனில், ஆனுற் காதல்
குலையிருக்கும் நெஞ்சத்தின் பார மென்றும்
குறையா''தென் றரற்றினுன் கொற்ற வீரன்!

அழும்பில்வேள் மனைவந்து ''அடலே'' றென்று
அழைத்திட்டான்! பேச்சில்லை! மரம்ப ழாத
பழந்தின்னும் நினைவான அடலே றங்கே
பசியார முடியாமற் சோலை புக்கான்!

மரத்தோடு மரமாக நின்ருன்; தந்தை
வலுவோடு அழைத்திட்ட குரலுங் கேளான்;
சிரத்தூடு மலர்பட்டுச் 'சில்'லென் றேறி
சிலையாக்க, மூச்சின்றி நின்ருன் மைந்தன்!

அமைச்சனவன் அருகில்வந் தழைத்தான்; பிள்ளை
அப்பொழுதே பிறந்தவன்போல் விழித்தான்; உள்ளக்
குமைச்சலெலாம் மறைத்திடவே இயலா ளுகிக்
குறுமுறுவல் அசடுபட, "அப்பா" என்ருன்!

"அடுத்தொருபோர் தெரியுமா?" என்ருன்; பிள்ளை
"ஆம்!" என்ருன்; 'என்ன'வென அமைச்சன் கேட்க
"அடுத்தொரு போர்! நற்போர்! ஆம்; அதுதான்!
[ஆனுல்,
அவையறிய நடவாத போர்"என் றன்ஞன்

உளத்தினிலே நினைத்தபடி, "என்ன கேட்டீர்,
ஊம்" என்று குழப்பிவிடப் பிள்ளை உள்ளம்
களத்தினிற்ருன்; ஆனுலும் வாள தல்லாக்
களத்திடையே என்றறியா அமைச்சன் மீண்டும்

"மன்னவர்தம் உயிர்த்தோழன் அறுகை யோடு
மடையனவன் மோகூரான் பழையன், மோத
எண் ணுகிருன்! அறுகைக்கு உதவி யாக
இருநாளிற் படைகொண்டு செல்லல் வேண்டும்!

தென்னவன்தான் மோகூரான்; ஆனுல் என்ன?
சீர்கெட்ட முறைமையைநாம் எதிர்த்தே நிற்போம்
என்னவனே! முப்படைக்கும் தலைவன் நீயே"
என்றுபெரும் மகிழ்வோடும் அணைத்துக் கொண்டான்!

மறுபடியும் சிந்தனையில் மைந்தன் நின்றான்
"வருந்தாதே! நம்மவரை நாமே மோத
வரும்வழியைத் திறந்தவர்கள் நாமா? அந்த
மடையன்தானே! சரி போய்ப் படைதிரட்டு!"

என்றுரைத்தான் அழும்பில்வேள்! அவனுக்கென்ன
இளமனதின் தாகத்தை அவன் கண்டான்?
'நன்று'என அடலேறு நடந்தான்; அந்த
நடையிலொரு அசட்டுவே காதற் சின்னம்!

# 5

## நள்ளிரவு நாடகம்

வெள்ளை உடை, வெள்ளை உடல், வெள்ளை உள்ளம்
விண்பிலிற்றும் மழைமுத்தின் ஒளிச்சி ரிப்பு!
விள்ளரிய கிள்ளைமொழி, பிள்ளைப் போக்கு
மேற்றிசையிற் கதிர்படிந்த சிவப்பு நாக்கு
அள்ளுமனக் குயில்மேனிக் கரிய கூந்தல்
அசையுங்கால் எவ்வுயிரும் அசைந்து காட்டும்!
எள்ளளவும் குறையில்லா அழகுத் தேவி
என்னசுகம்?'' எனும்கீதம் இசைத்தி ருந்தாள்!

பாட்டு

(வேறு)

என்ன சுகம்! ஆகா! என்ன சுகம்—மாறு
இளமைத் தமிழ்ச் சிரிப்பில் என்ன சுகம்?
என்ன சுகம்—ஆகா...

சின்ன முகம்கோடிச் சித்திரங்கள்—காட்டும்
தென்னமுதாம் தமிழ் இன்னமுதை நினைந்தால்
என்ன சுகம்—ஆகா...

கன்னியர் தோகைமயில்! காளையர் சிங்கம்!
காதல் பிறந்துவிட்டால் கலைநயம் பொங்கும்
பொன்னி நதிவளர்க்கும் புதுப்புனல் நாதம்
புவனங்கள் யாவினுக்கும் தருமெழிற்கீதம்!
என்ன சுகம்—ஆகா...

முத்துக் குவித்திருக்கும் சேரலர் மங்கை!
முல்லைப் படை எடுக்கும் பாண்டிய நங்கை
மொத்தத் தமிழ்உருவம் சோழர்தம் தங்கம்!
மூவரும் சேர்ந்துவந்து காவிரி ஓரம் நின்றால்
என்ன சுகம்—ஆகா...

(வேறு)

படிக்கத்தை ஓர்புறமும், வெற்றி லைசேர்
பைக்கட்டை மறுபுறமும் வைத்தா ளாகிக்
கடற்பஞ்சு மயிர்க்கற்றை ககனம் பார்க்கக்
காலத்தின் பழம்பாதை அச்சுத் தோன்ற
நடுக்கத்தில் ஓயாத நடனங் காண
நாளைக்கோ மறுநாளோ, எனும்ப டிக்குத்
துடிப்பெட்டைப் பெண்ணுளின் அன்னை யான
தொல்கிழவி, கீதத்தைக் கேட்டி ருந்தாள்!

நாப்பாடக் கைபாட நயனம் பாட
நலம்பாடி முடித்திட்டாள் நடுவேற் கன்னி!
மூப்பாட, முடியாட, முன்கை யாட
முதிர்மாதா பின்காணும் பேச்சு ரைப்பாள்!

"பாப்பாடும் கண்ணே! என் பளிங்குக் கோடே!
பழநாளில் நான்வாழ்ந்த வழியில் நீயும்
பார்ப்பார்க்கும், கேட்பார்க்கும் ராப்பெண் டாகப்
பணியேன்நான், மணமுடித்துப் பார்க்க எண்ணம்.

தாசிகுலம் என்றாலும் தகைமை மிக்க
தமிழர்குலம்.தான்! என்ற போதி லும்கேள்:
மாசுறுநம் குலத்தினிலே பெண்ணெ டுக்க
மனந்துணியார் பிறர்; அதனாற் பாடஞ் சொல்லும்
ஆசிரியர்—நம்குலத்தார்—அவர் பிள்ளைக்கு
அழகியுனை மணமுடிக்க நினைக்கின் றேன்யான்
பாசிபடி நீரேனும் குளத்தின் சொந்தம்
பனித்துளியின் கூட்டென்று கருது மன்றோ?

பொற்கிழியே சொல்!" என்றாள். உடனே அந்தப்
பூக்காட்டின் வாய்ப்பூட்டைத் தேன்தி றக்கும்!
"கற்சிலையோ அம்மாநான்; கயவன் அந்தக்
காமுகனுக் கென்நெஞ்சைத் தத்தம் செய்ய?
பொற்கிளியை வானரத்தின் மடியிற் போடப்
பொருந்தியதோ உன்னுள்ளம் போதும் போதும்;
விற்பிடித்த வீரர்எனை மணவா ரென்றால்
வியன்கலைக்கே மணம்போகி வாழ்ந்தி ருப்பேன்.

தென்னாடு சேரனகம் மட்டும் அல்ல!
திருப்பாண்டி நாடுண்டு மதுரை என்று!
பொன்னாடு சோழன்மனை உறையூ ருண்டு
பொருந்துமெழில் ஆடவர்கள் பலபே ருண்டு!

இந்நாடு எத்திலுமே என்னை ஏற்கும்
இன்குணத்தார் இல்லையெனில் மணமே வேண்டாம்;
மண்ணான தாசிகுலம் பிறப்பா லன்றி
மடிதொடர்ந்து வரும் என்றும் நினைக்க லாமோ!''

''சொல்கின்றாய் நீமகளே! ஆனால் இந்தத்
தொல்புவியிற் பரம்பரைக்கும் களங்கம் உண்டு;
மெல்கின்றாய் வெறும்வாயை! நற்கு லத்தார்
விரும்பிஉனை ஏற்பாரென் றெண்ணி டாதே!''
கொல்கின்ற சொற்சொல்லி முடித்தாள் அன்னை;
குமுறியெழும் துக்கத்தை வெடித்தாள் கன்னி!
செல்கின்ற நடங்காட்டும் இடவ ளைக்கை
வீணையின்மேற் பட்டு,இசை சோகம் மீட்டும்!

அணையாத பெருந்தீயை மூட்டி விட்டு
அன்னையார் மறுபுறத்திற் சென்று விட்டார்!
கணைபாய்ந்த நெஞ்சத்தைக் கைகள் ஆற்றக்
கார்கூந்தல் தலையணையாய்க் கன்னி கொண்டு
தணியாத குழப்பத்தில், ஊற்றெ டுத்த
தண்ணீராய்க் கண்ணீரை விழியாற் கொட்டி
''இனியேது! போர்க்களத்தில் பூத்த பூதான்!''
என்றெண்ணித் துயராற விம்மிச் சோர்ந்தாள்.

வான்திறந்து வந்தன்ன வலக்கை ஒன்று
மங்கைமுகக் கண்ணாடி தேக்கும் முத்தைத்
தேனெடுக்கும் கரும்பினைப்போல் எடுக்கும்; உள்ளம்!
தெளிவிக்க வந்தேனென் றதுவே சொல்லும்!

கூன்கிழவித் தாயென்று கரம்நடுக்கங்
கொண்டதனுற் பெண்பேதை எண்ணிக் கொண்டே
மான்கொடுத்த விழிக்கூட்டை இறுக மூடி
"மனந்தேற்ற வேண்டாம்போ!" என்ருள்! ஆனுல்,

"மாங்கனி"என் ருன்வாயின் வார்த்தை கேட்டு
மனந்துடித்து நடுக்குற்று எழுந்தாள்! தெற்குப்
பாங்கினையே உருக்கிவிட்ட பாடல் யாவும்
படையெடுத்து நிற்கின்ற இளமை கண்டாள்!
ஆங்குவர முடியாத இடத்துச் சேய்தான்;
ஆனுலும் அவள்உள்ளம் கொதித்துச் சொல்லும்
"தீங்குநினை வுற்றீரோ அமைச்சர் பிள்ளை,
தேவடியாள் குலந்தான்நான்; குணத்தி லல்ல!

திறந்திருந்த வீட்டிற்குள் ஓசை யின்றித்
திருடனைப்போல் நுழைந்தீரே! தென்னர் தானு?
மறந்திருந்தால் எதுவரையில் துணிய மாட்டீர்!
மானத்தை இக்கோதை மறவாள்! போம்,போம்!
பிரிந்திருந்த காதலிபால் வந்தாற் போலப்
பெண்முகத்தில் கைசேர்க்கும் துணிவு நன்று!
அறந்திரிந்து மறம்பிறக்கச் சேர நாட்டில்
அமைச்சர்மகன் காரணமாய் இருக்க வேண்டாம்!

முதற்குற்றம்! என்வரையில் மன்னித்தேன்! போம்
மூதாட்டி என் அன்னை வருமுன் னேபோம்!"
பதைப்புற்(று) இவ்வார்த்தை பாவை சொன்னுள்,
பனிச்சொட்டாய் இரண்டுதுளிக் கண்ணீர் சிந்தி;

“வதைப்புற்ற நெஞ்சத்தின் வார்த்தை யாவும்
மறைந்திருந்து கேட்டேன்நான்! அதனு லேமன்
பதைக்குள்ளே நல்லவரும் உண்டு என்னும்
பதங்கூற வந்தேன்; பொய் எனநி னைத்தால்

மன்னிக்க இடம்,காலம் தவறே; ஆனால்
மன மாசு அணுவேனும் இலவே இல்லை!
பொன்னிக்கா மாங்கனியே! அரசின் முன்னே
பொட்டிட்டு நீ பறந்த காட்சி கண்டு
உன்னைத்தான் உன்னைத்தான் மணமு டிக்க
உறுதிகொண்டு விட்டேன்நான்! சிறிதுகூட
என்னைத்தான் நீயறிய வில்லை; ஆனால்
என்றேனும் நல்லுள்ளம் அறிவா”யென்றான்!

வெள்ளிக்கா சொருபிடியைக் கீழே கொட்டி
விட்டதுபோல் அலட்சியமாய்ச் சிரித்து, “ஐயா!
நள்ளிரவு! தாசிமனை! இளம்பெண் தூங்கும்
நறுமலர்ப்பஞ் சணையருகோர் காளை வந்து
மெள்ளமுகந் தொடுவதுதான் உங்கள் ஏட்டில்
வீரர்கள்பெண் கேட்கவரும் செய்தி யாமோ?
கள்ளமனம் எம்குலத்திற் பழைய சொத்து!
காளையதைக் கொண்டுவரல் நன்றே யல்ல!

என்றவள்தன் உரைகேட்டு, நிலைக லங்கி
இப்போது தெளிவுசொலல், முடியா தென்று
கன்றுமனம் தத்தளிக்க, இட்ட கண்ணைக்
கழற்றமல் குருடாகி நடைபி றழ்ந்து

நன்றெனவோர் சிறுவார்த்தை மெல்லப் போட்டு
நடந்தான்நல் அடலேறு தெருவை நோக்கி!
இன் றுநாம் சென் றவழி சரியே யல்ல,
என்ப துபோற் அவன்நெஞ்சு இடித்துக் காட்டும்!

தாளாத காதலினுல் தடங்கண் ணுளைத்
தன்சொந்த மனையாக்கி மணமு டித்து
மீளாத இன்பத்தில் வீழ்ந்தி ருக்க
விரும்பித்தான் அடலேறு அங்கு வந்தான்!
கேளாத நல்வார்த்தை புதிதாய்க் கேட்டால்
கேள்வியிற்சந் தேகம்வரல் இயற்கை யன்ருே?
நீளாத கைஅங்கு நீண்ட தாலே
நெடுநேரம் நில்லாதென் றவள்நி னைந்தாள்.

## 6

## பிஞ்சு மனம்

சிந்தித்துச் சிந்தித்து முடிவி லேதன்
சிந்தையினை அவளுக்குச் சொல்லித் தீர்க்க
முந்தித்தன் நிலை, காலம், புதிய வீடு
முற்றிலுமே மறந்தானுய்ப் போந்த தற்கும்,
சிந்திக்க வழியின்றி அவள்மு கத்தைத்
தீண்டியதும் மனத்தெண்ணி நைந்தான் பிள்ளை
சந்தித்த சுகப்பாடம் நினைவி ருந்து
தடம்போடச் சிறுதுன்பம் பின்னி முக்கும்.

பாறைக்கல் பள்ளத்தில் விழுந்தாற் போலப்
படுக்கையிலே அடலேறு வந்து வீழ்ந்தான்!
தூறைக்குட் பஞ்சாகித் துவண்டு பட்டுத்
துடி துடிக்கும் தன்நெஞ்சைத் தொட்டுப் பார்த்தான்
நாளைக்கு மறுநாளே மோசூர் செல்லும்
நாளென்று நினைக்குங்கால் தலைக னக்கும்
வேளைக்கு வேளை இரா நடத்தல் கண்டு
விடிவதையும் கண்ணாலே கண்டான் வீரன்!

# 7

## உளங்கவர் கள்வன்

(வேறு)

பொழுது பிறந்தது; பூவை தன் இமைக்
கதவு திறந்தது; காளை இ ராவினில்
வரவு தந்ததை மான்மனங் கூறவும்
விழிதிறந் தும்மெய் மேலெழ வில்லையே!

(வேறு)

படுத்தபடி சிந்தித்தாள்; "அமைச்சர் மைந்தன்
படமெடுத்த நாகம்போல் வந்தி ருந்தால்
கெடுத்துவிட எந்நேரம்? அழிந்த பின்னர்
கேள்விஎழும்! தமிழ்நீதி கிடைக்கும்! ஆனால்
தடுத்துவிடத் துணிவுண்டா நமக்கு? வீரன்
தன் ஆசை முடித்தேக முடியா தா?நாம்
அடுத்தவனைத் தண்டிப்ப தல்லால் நம்மில்
அழிந்துவிடுங் கற்பனையார்? தருவார்? ஆகா!

மடமனமே! என்செய்தாய்? நல்லெண் ணத்தை
மருட்டிவெளி யேற்றினையே! போகும் போது
கடைவிழியில் அன்பொழுகப் பார்த்தும், ஏக்கம்
காட்டியும்தன் தவறெண்ணி ஏகி னனே!

விடமறியாக் காளைஉனை இனிக்காண் பாளு?
வெண்மேகம் பள்ளத்தில் வருமா மீண்டும்?
நடமிடுமா? சீச்சீ? நீ பெண்ணிற் பேதை
நல்லவனைப் போவென்ருய், இவ்வா றெண்ணி!

நிலைவிழியாற் பூமிதனைப் பார்த்தாள்; ஏறு
நின்றவிடந் தனைப்பார்த்தாள்; உயிரை வைத்தாள்;
அலைபுரளுங் கூந்தல்மதி முகத்தி லோடி
அவன்தொட்ட கண்ணருகில் வந்து நிற்கக்
கலைவண்ணக் கட்டழகி நிமிர்ந்து பார்த்தாள்;
காளையிலா வெளியினையே கண்டாள்; அங்கே
மலையளவு நினைந்திட்டாள்! கண்ணு டிக்குள்
மலர்முகத்தைப் பார்த்திட்டாள்; குறையக் காணும்!

வலக்கரத்தைத் தலையணையிற் சேர்த்து, நல்ல
மதிமுகத்தை அதில்தேக்கி இடது கையால்
தலைகோதி—அன்னவன்கை போலஎண்ணம்—
தரைபார்த்து இளஞ்சிரிப்பில் இதழ்வ ளர்த்து
சிலைக்கோயிற் செல்வி உடன் தலைய ணைக்குள்
செழுமுகத்தை முழுதாகச் சேர்த்து வைத்தாள்,
மலைத்தோளின் செல்வனுக்குத் தான்நி னைந்த
மாசெல்வம் தலையணைக்கே சொல்வாள் போல!

(வேறு)

முரசறையும் ஒலிகேட்டு மங்கை நல்லாள்
முன்னேடி வாசலிலே வந்து நின்ருள்!

# 8

## முரசு முழங்கிற்று

(வேறு)

நடுத்தெருவில் முரசறைவோன் முழக்கு கின்ருன்:
"நாளைக்கு மோகூரின் களத்தை நோக்கி
நடக்கும்நம் படையாவும் தலைமை யாளர்
நம்தலைவர் அடலேறு!" என்ருன்; போனன்!
அடுத்தபடி படைஒன்று அணிவ குத்து
அடிஎடுத்து ஒழுங்காகச் செல்லும்! முன்னல்
அடங்காத பொலிகாளை உருவம் போலும்
அடலேறு செல்கின்ருன் தலைமை தாங்கி!

9

## கண்டறியாதன கண்டாள்!

மடைசேர்த்து முன்னுளே பயிற்சி கொள்ளும்
பணிக்காகச் செல்கின்ற தென்னன் செல்வம்
மடைபேர்த்து விட்டாற்போல் அங்கு மிங்கும்
மனத்தூடு விழிபோட்டுப் பார்த்துச் செல்ல
நடைபாதை தனில்நின்ற நாட்டுமுல்லை
நானிங்கே என்பதுபோல் நாணங் காட்டித்
"தடையில்லை இப்போது! மனத்தில் நீரே!
தகராறுக் கிடமில்லை" என்னும் மெல்ல!

வண்டுவந்து மெல்லமெல்லத் தேடித் தேடி
மனம்பிடித்த மலர்தன்னில் அமர்தல் போலக்
கண்டுவந்த கட்டழகன் கண்கள் தாமும்
கருதிப்பொன் மேனிதனில் மோதி அங்கே
மண்டியவா றிருந்திடவும், நடந்த கால்கள்
மறுத்திடவும், படையாவும் தயங்கி நிற்க
ஒண்டொடியின் புன்னகைக்கு உயிரை விட்டு
உடற்கூடு கால்தூக்கிப் போட்டுப் போகும்!

# 10

## பொருள் விளங்காப் புன்னகை

பான்மணக்கும் காலைநேரம் படர்ந்த புல்லில்
படிஞாயிற் றின்நேரம் காளை நின்று,
"ஏன்சிரித்தாள்? அலட்சியமா? காதல் தானோ?
என்ன இது! தெளிவாக அறியே னேநான்!
வான்விளக்கே போல்நின்றாள்! அடடா! நானோர்
மடையன்தான்! கேளாமல் வந்து விட்டேன்!
ஏன்தயக்கம்?" என்றெண்ணி மனது தேர்ந்து
எடுத்துவைத்தான் பொற்பாதம் கனியை நோக்கி!

# 11

## சிறகடித்த காதல்

தாய்க்கிழவி மகள்துடித்த துடிப்பைப் பார்த்துச்
"சாணுற்று நீர்மூழ்கி வந்த வேளை
பேய்பிடித்தும் இருக்குமோ மகளுக்" கென்று
பெருஞ்செய்தி அறியாமல் திகைத்திருந்தாள்!
சேய்கொடியாள் அவள்கழுத்தில் கையைப் போட்டுத்
"தெரிந்திடுவாய் ஒருசேதி! எனைமணக்க
வாய்த்தஒரு மாப்பிள்ளை! நற்குலந்தான்!
மாதாவே சொன்னயே, மாட்டாரென்று!

ஆணழகன்! சிங்காரன்! அவனியெல்லாம்
அடக்கிவைத்த மாவீரன்! அறிவுத் தோட்டம்!
தேன்பொழியும் கருணைமனம்! வடகோடன்னத்
திரண்டிருக்கும் உயர்தோளன்! அழியாச் செல்வம்
மானமிகும் மறக்குலத்தான்!" என்றாள்! அன்னை
மனங்கலங்கி 'ஓ!' வென்று அழுதவாறு
"வானமுதே! பித்தானாய்! ஐயோபாவி
வயிற்றினிலே இதற்காகவோபிறந்தாய்?"

என்றழுதாள்! மாங்கனியோ தேற்றிடாமல்
எட்டிவைத்துச் சிட்டாக வாசல் வந்தாள்!
நின்றுவிட்டாள் அப்படியே! தலைகுனிந்தாள்!
நீலவிழி நிலம்பார்க்கக் குறுகிப் போனாள்!
தின்றுவிடு வான்போல அங்கே நின்று
திருமார்பன்! அடலேறு! பகைப்பு லத்தைக்
கொன்றழிக்கும் குணநலத்தான் பார்த்தி ருந்தான்
கோதையவள் உடலெல்லாம் இளஞ்சூ டேறும்!

''வாருங்கள்!'' என அவளும் அழைக்க வில்லை,
வாய்திறந்து இவன்பதிலும் கூற வில்லை;
''வாருங்கள்!'' எனமற்றோர் குரலைக் கேட்டு
மனமருண்டு திரும்பியபோ தொருவன் நின்று
''வாருங்கள்! அரசரொடும் அமைச்சர் உம்மை
வழிமீது விழிவைத்து எதிர்பார்க் கின்றார்!
''வாருங்கள்! அவசரமாம்!'' என்றான் காளை
வழிமாற்ற வந்தவனின் பின்னாற் சென்றான்!

''இன்னும்ஒரு அரைநாழி நின்றி ருந்தால்
என்னென்ன பேசிடலாம்!'' என்றிவ் வாறு
பன்னிமனம் புறம்போக மெய்முன் னேகப்
படைவீரன் போகுமிடம் மறந்து போகக்
கன்னியவள் வந்தவனை 'எமனே' என்று
கருத்தினிலே எண்ணிவா றங்கே நின்று
''இன்னமுதை மறுபடியும் காண்ப தெந்நாள்?
என்மனதின் நிலைகூறி மகிழ்வ தெந்நாள்?

நாளைமுதல் மோகூராம்! நாம்போ வோமா?
நம்மன்னர் வடைதிசைக்குச் செல்லும் போது
காளைகளின் களைப்பாற்ற, நடனம் ஆடக்
கணிகையரை அழைத்தேகி ஞரே! இந்த
வேளையிலும் அவ்வாறே நடக்கு மாஞல்
மெய்யாக நாம்போவோம்!'' என்று தேறித்
தாழைமணத் தளிர்மேனித் தையல் சென்ருள்
தாய்க்கிழவி அழுதோய்ந்து உறங்கு கின்ருள்.

## 12

## "போய்வா களத்திற்கு!"

(வேறு)

மாற்றலர், அஞ்சிச் சோர
மனைக்கொடி துஞ்சும் மார்பன்!
கூற்றுவன் பகைவர்க் காகிக்
குணகடல் தென்னர்க் காகும்
ஆற்றலன் சேரன் பக்கம்
அமைச்சரார் அழும்பில் வேளும்
வேற்றுமை அறியாக் கோதை
வில்லவன் தானும் நின்றார்.

இளங்களி றங்கே வந்தான்;
இட்டழைத் தழும்பில் சொல்வான்:
"மனங்குளி ரடலே றின்று
மாபெரும் பொறுப்புன் பாலே!
களந்தனில் மோகூர் வேந்தன்,
கால்சிரந் தன்னில் மோதப்
புறந்தரும் காட்சி காணப்
போகின்றாய்! வெற்றி காண்க!

பழையனின் காவற் சின்னம்
பாம்பிரு கண்கள் போலும்
குழைமலர் 'வேம்'பென் றுன்பால்
கூறவா வேண்டும்! அஃதை
இழைபட வெட்டி வீழ்த்தி
இரதமொன் றதிலே செய்து
மழையென முரசு கொட்டி
வருகவென் சிம்மச் செல்வ!''

என்னவும், தலையைத் தூக்கி
ஏறுபார்த் திட்ட பார்வை
துன்னலர் எதிரே நின்ருல்
தூசுபோற் பறப்பர் என்னும்!
''கன்னலே! மற்றும் ஒன்று;
களைப்புறும் வீரர் தங்கள்!
இன்னலைத் தீர்க்கப் பாட
இரண்டொரு கணிகை கொள்க!''
என்றதும் அடலே றுள்ளும்
என்னவோ செய்யும்! ஆங்கே
நின்றவன் கங்கன் சொல்வான்:
''நிகரறு மன்ன! தெற்குக்
கொன்றையூர்த் தங்கம், வைரம்
கோதையர் இருவர் தம்மை
இன்றுநான் ஏற்பா டாக
இட்டு வந்துள்ளேன்!'' என்று!''

"பாவி நீ! பாழாய்ப் போக
பழையனிற் பகையே நீயும்
ஆவிதான் வருவா னென்று
ஆர்ப்பரித் திட்ட நெஞ்சில்
சாவையே அழைத்த தாகச்
சாற்றினுய், பார்க்கி றேன்வா!"
மாவிலே வடுப்போற் கண்ணன்
மனத்துறும் கருத்திவ் வாறு.

சேரமான் அருகே வந்து
தீரனின் தோளில் தட்டி,
"வீரனே! வென்றி கொள்க!
வென்றிநம் வீட்டுச் சொத்து!
தீரனே பழையன்! ஆனுல்
திருடரின் தீரம் போலும்!
சேரனே, தென்னன் பிள்ளாய்!
சென்றுவா குறைவில் லாது."

விடைகொடுத் தேக, வீரன்
வீறுகொண் டேகி, வாசற்
கடையிலே வந்து நின்று,
கங்கனை அழைத்துப் "பேதாய்!
நடையிலே வாத்துப் போலும்
நயக்குரல் காகம் போலும்
உடையினைத் தவிர வேறு
உருப்படி இல்லாப் பெண்ணை,

இடர்தவிர்த் தின்பங் கொள்ளும்
இசைக்கென அழைத்துச் சென்ருல்
தொடர்வது தலைக்க னந்தான்
தொல்லைகள் நீங்கா தப்பா
படர்முகம் பார்த்தாற் போதும்
பசியமாங் கனியென் பாளை
உடனவள் மனைக்குச் சென்றே
உத்தர விடுபோ!'' என்ருன்.

''கொன்றையூர்த் தங்கம், வைரம்
குயிலுங்க!'' என்ருன் வீரன்
''நன்றுதான், கவிஞ ரெல்லாம்
நல்லிசை குயிலைப் போலும்
என்றுதான் சொன்ன ரல்லால்
எவரந்த இசையைக் கேட்டார்?
இன்றுநான் கேட்டேன் ஐயோ!
எனக்கதில் சகிப்பே இல்லை.

சொன்னதைச் செய்முன் ருலே
துவளுடல் இளம்பெண் ணுளைக்
கன்னலை, மணியை, அந்திக்
கருக்கலில் மணக்கும் பூவை
இன்னேயே சொல்லிவா'', வென்று
இயம்பினன்; கங்கன் தானும்
''என்னமோ ஏதோ கொஞ்சம்
இருக்கு'' மென் றெண்ணிப் போனன்.

# 13

## தானேயுந் தளிரும்!

கரிப்படை முன்னம் போகக்
கடலென ஒலிகள் முட்ட,
பரிப்படை அதற்குப் பின்னே
படுதரைப் புழுதி தூக்க
நெரிப்புறக் காலாட் கூட்டம்
நீண்டவாள் தாங்கிச் செல்ல
சிரிப்பெனும் படையின் செல்வி
சென்றனள் பல்லக் கேறி.

முதற்கரி மீதி வர்ந்த
மோகனன் விழியைப் பின்னால்
கதப்புடன் திருப்பிப் பல்லக்
கதில்வரும் கனியைக் காண
மதிப்புறுங் காதற் சேயின்
மனத்தினுள் அவளும் பாய,
பதிமுனும், சதிபி னும், கண்
படையினுள் உருவச் சென்றார்

காத தூ ரம்கடந்து
களைத்திடு படைகள் நெஞ்சம்
"போதுமே, கொஞ்ச நேரம்
பொறுத்துநாம் செல்ல லாமே
நாதமும் இசையும் கேட்டு
நடக்கலாம்!" என்றே எண்ணக்
காதலர் இருவர் மட்டும்
களைப்பிலா திருந்தார் அங்கே!

அனைவரும் ஓய்வுக் காக
அருவியின் பக்கம் வந்து
கனிவுற அமர்ந்து, நீரிற்
கால்முகம் கழுவி, "மாதர்
அனைவரும் வருக!" என்ன
அறுவர்மாங் கனியைச் சேர்த்து
நனிபசுக் கூட்டம் போலும்
நாட்டியம் செய்தே வந்தார்.

(வேறு)

மலையினிலோர் மகிழம்பூ உதிர்ந்து, சூறை
மல்லாக்கத் தூக்கிவந்து போட்ட தைப்போல்
கலைநெகிழப் பலபேரும் ஆடி னூர்கள்
கன்னிமட்டும் நாணத்தில் நடன மிட்டாள்.
அலைகூந்தல் பூமிதொடப் பாதம் பட்டு,
அடிக்கடிதன் தலைவானை நிமிர்ந்து பார்க்கக்
குலையோடு பழுத்தபழம் ஆடக் கண்டு
குடிமயக்கம் போல்வீரர் மயங்கிப் போனர்.

(பாட்டு)

மாங்கனி

சின்ன வயதினிலே—சிரிக்கும்
செந்தமிழ்ச் சோலையிலே
கன்னிக் கடலமுதைக்—கருத்தால்
கண்டவன் யாரோடி?

மற்றைய பெண்

தென்னவன் பிள்ளையடி—அவனோர்
சித்திரக் காரனடி!
கன்னல் வனந்தேடி—அலைந்த
காரியக் காரனடி!

மாங்கனி

நல்ல மனந்தானா?—இணைந்தால்
நாடி மணப்பானா?
சொன்ன உறுதியெலாம்—காற்றில்
தூவி விடுவானா?

மற்றைய பெண்

பிள்ளைக் குணந்தாண்டி—பேச்சிற்
பித்தம் குழைப்பாண்டி
வெள்ளை மனத்தாரை—வலையை
வீசிப் பிடிப்பாண்டி

## மாங்கனி

நட்ட நடுசியில்—ஒருநாள்
நல்ல மலரணையில்
கெட்ட குணமின்றி—எந்தன்
கிட்ட நடந்தாண்டி!

## மற்றைய பெண்

ஐயோ!
என்னென்ன சொன்ஞேனே?—சடையை
எட்டிப் பிடித்தானே?
அன்னக் கொடியழகே!—உனையே
அன்பில் அணைத்தானே?

## மாங்கனி

அவ்வள வொன்றுமில்லை—கண்ணீர்
ஆற்றி நடந்தாண்டி
கொவ்வை இதழ் துடிக்க—நானும்
கூவி அழுதேண்டி

என்ன தவறு செய்தேன்!—அவனை
எத்தித் துரத்தி விட்டேன்!
பின்னர் அவனுடனே—தனிமை
பேசக் கிடைக்கவில்லை.

முன்னர் நடந்ததெல்லாம்—துரையே
முற்றும் மறந்து விடு!
பொன்னை நகையாக்கு—மார்பில்
பூட்டி மகிழ்ச்சி கொள்ளு!

என்று இரைந்தேண்டி—கேட்க
எவரும் இல்லையடி!
இன்று உரைத்ததெல்லாம்—வேறு
எவர்க்கும் இல்லையடி!

(வேறு)

இன்றுஉரைத் ததுவேறு எவர்க்கு மில்லை
எனக்கேதான் அடடா! நான் பேறு பெற்றேன்!
என்றுமனங் கூறிடவே "கண்ணே!" என்றான்
"என்ன?" வென்றான் ஒருவீரன் "தாய்நாட் டன்பே!"
என்றுரைத்தான் இளந்தலைவன் திருத்திக்கொண்டான்
"எல்லோரும் புறப்படலாம்" என்றான் வீரன்;
நன்றெனமுப் படையதுவும் நடைதுவங்க
நான்குவிழி ஆனந்தக் கண்ணீர் பொங்கும்!

## !4

## முற்ருத முதலிரவு

மோகூரின் வடதிசையில் படைகள் வந்து
முடிவந்தி நேரத்தில் களைத்தி றங்க,
வாகோடுங் திருமேனி மங்கை நல்லாள்
மற்றைந்து பெண்ணேடுங் கூடம் கொண்டாள்!
ஆகாத பேச்செல்லாம் ஐந்து பேரும்
அளவாது பேசி அவண் ஆடி நிற்க,
சாகாத சித்திரத்துத் தையல் மட்டும்
தன்தாக நெஞ்சமே துணையாய்க் கொண்டாள்!

தனிமையிலே அடலேறு கூடங் கொண்டான்
தையலுள இடமிருந்து வெகுதூ ரத்தில்
இனிமையெலாம் நினைவாக, நிலவு காய
இட்டசுகத் தென்றல்புலன் ஐந்திற் பாய,
தனிமொட்டுக் கொடிஉச்சி தன்னில் ஆடும்
தன்மையினில் ஒருஎண்ணம் நெஞ்சி லாட
"இனிப்போவோம், படைஉறங்கும்" எனநினைந்து
இராநடுவில் புலிவீரன் பூனை யானுன்!

'குக்கூ'வென் றொருபுறத்தில் குயில்கூ விற்று!
குதிரையிலே ஒன்றுகனைத் தொலியேற் றிற்று!
'அக்கா' வென் றொருகிள்ளை மொழிபே சிற்று!
ஆந்தையதும் வடநாட்டு இசைபா டிற்று!
இக்காவின் இசைராணி நானே என்ன
எள்மூக்குச் சில்வண்டு குரலோட் டிற்று!
எக்காலும் மாற்றாத ஒருரா கத்தை
எல்லாமும் பாடமனம் பயமே கொள்ளும்!

இட்டஅடி தெரியாமல் ஒலியில் லாமல்
எடுத்தஅடி நொந்தாலும் வலிதோன் றாமல்
பட்டமுள்ளை எடுப்பதற்கும் நினைவில் லாமல்
படுத்திருக்கும் வீரர்களை மிதித்தி டாமல்
விட்டவிழி இருளோடு கலந்து போக
வெளிச்சமிலா முட்காட்டில் மெல்ல மெல்ல
துட்டமனந் தாளாத தூய பிள்ளை
தொடர்ந்துமங்கை கூடாரத் தருகில் வந்தான்!

எல்லோரும் காவலரும் உறங்கு கின்றார்
இளஞ்சேய்தன் மனம்போல உட்பு குந்தான்
நில்லாமல் வெகுதூரம் ஓடி வந்து
நெஞ்சடிக்க நிற்கின் ற குதிரை யன்ன
பொல்லாத இதயத்தில் தாளத் தோடு
போய்ப்பார்த்தான் ஐவரே துயின்றி ருந்தார்
நல்லானைக் காணவில்லை, நாயி ருக்க
நடுமானைக் காணவில்லை, திகைத்துப் போனான்.

"ஆபத்தோ? எவரேனும் திருடி ஞரோ?
அவளெங்கே வெளிப்புறத்தில் நிற்கின் ருளோ?
பாபத்தை அறியாரே சேர வீரர்!
பழிசெய்யத் துணிவாரா? சீச்சீ! இல்லே
தாபத்தில் நிலாப்பார்த்து அமர்ந்தி ருப்பாள்!
சரி! போவோம்!" என்றெண்ணித் திரும்ப, அங்கே
லாபத்து முழுப்பணமாய் நின்ருள்; ஆமாம்!
லச்சைக்கே மணம்போகி நின்ருள் நங்கை!

(வேறு)

"மாங்கனி!" என்ருன் வீரன்; மாங்கனி காதல் மீறித்
"தாங்குவீர்" என்ருள்! தாங்க, தளிர்க்கொடி
[சுற்றிக் கொண்டாள்
"நீங்கிடேன்" என்ருன் மெல்ல, நீளவாய்ப் பெண்
[ணொருத்தி
மாங்கிளே முறித்தாற் போல மறுபுறம் திரும்பிச்சாயும்.

"வா"வென அவளேக் கையில்
வளேத்தவா றிடத்தை விட்டுப்
பாமணம் இசையைச் சேர்த்துப்
பறந்தது போலே காட்டில்
ஆவொடுங் காளே போனுன்!
ஆசையும் உடன்போ யிற்று
மாவினில் முல்லே சுற்றி
மணத்திடு மிடத்தைக் காண!

ஒருவரும் இல்லாக் கூடம்
உவமைக்கு நில்லா தாகி
இருவரின் வரவை யேற்க,
இராப்பொழு தமுதூ றிற்று!
பருவமும் துடிப்பும் வந்து
பக்கமாய் நிற்கக் காடு
அருமணை யாகக் கீழே
அமர்ந்தனர் புல்லின் மீது

"அமுதமே எங்கே சென்றாய்
அஞ்சினேன் காணு தாகி,
குமுதவாய்ச் சிலையே! என்னைக்
கொன்றதேன் சொல்லாய்?" என்ன,
"தமிழரே! உயிரே! உள்ளந்
தாங்கொணுக் காத லோடு(ம்)
உமதுருத் தேடி வந்தேன்,
உயிரில்லை! காணேன் உம்மை!

திரும்பினேன்; என்கூடத்தில்
தேடிநீர் நிற்கக் கண்டேன்!
அரும்பிய இருவர் நெஞ்சும்
ஆள்இடம் மாற்றக் கண்டேன்!
கரும்புநீர், அறியாப் பேதை
கடுமொழி சொன்னேன்" என்று
விசும்புநீர் பொழிந்தாள், வெள்ளை
விசும்பிலும் நீர்உண் டென்ன!

"அந்தநாள் கடுமை;யேனும்
அதிலொரு சுகந்தான் கண்ணே;
சொந்தமே ஊடல் கொண்டு
தொடங்கிய தன்றோ? உன்னைத்
தந்தநாள் அதுதான்; இந்தத்
தணியாச் சுகம்என் நெஞ்சில்
வந்தநாள் அதுதான்" என்று
வடிவிழி நீரைப்போக்கி,

இருகையும் வைத்துத் தோளில்
இழைத்தவா றிருந்து, சின்ன
முகத்தையுந் திருப்பி, அங்கு
மூண்டபொன் னழகு பார்த்து
நிலவொளி மோதுங் கண்ணுள்
நிழலிலே தன்னைக் கண்டு
இமையினை விரலால் தொட்டு
ஏங்கிய புருவத் தின்மேல்

அமைதியின் சாயை கண்டு
ஆடிபோல் நெற்றி தோய்ந்து
சுமையிலும் விரும்பித் தாங்கும்
சுமையெனக் கூந்தல் மீது
வலக்கரம் சேர்த்துத் தந்தி
வாத்தியம் வாசித் தங்கு
இடக்கையைக் கழுத்திற் சேர்த்து
இசைபடச் சொன்னான் அன்னான்!

(வேறு)

கொத்தும்விழி தைத்ததெனில் எழில்பெருகச்
சிவப்பதுமுன் பளிங்குக் கன்னம்—சத்தமிலா
முத்தமெலாம் வடுவாகப் போமளவு
மெல்லியலுன் முகத்துப் பட்டு
நத்து மனம் முத்தெடுக்க நாடிவரின்
தான்மூடும் நறுந்தேன் செவ்வாய்
எத்தினமும் உடனிருந்தால் பசியொழிந்த
வேளையிலும் எடுத்தே உண்பேன்!''

(வேறு)

உரைகேட்ட குறுநகைப்பெண்
ஒடிந்ததுபொற் றுவண்டு விழ,
இருகையில் எழில் விரித்தே,
இளஞ்சேய் அக் கொடிதாங்க
உள்ளங்கை இருந்தபொருள்
உருண்டுவந்து விழுந்ததுபோல்
விள்ளரிய மார்பகத்தில்
விழுந்தாள் அக் கனிச்சோலை!
சித்திரப்பூ முத்தாரம்
சிந்தாமற் சிதையாமல்
கத்தரிப்பூ வண்ணவிழி
கலங்காமல், அசையாமல்
சித்து வினை அடியாத
சீதளஞ்சேர் கன்னிமுகம்
நத்தி, அருகடைந்து
நாமே உலகமென்று

மெல்ல...மிக மெல்ல
மென்வளைக்கை அள்ளிவிட
சில்லென்று இருந்தஉடல்
தீப்பாய, இதழருகில்
கொண்டு சுவைதழுவிக்
கொள்ளைப் பெரு மயக்கில்
குடமதுவைக் கிண்ணத்தில்
கொட்டிக் குடிப்பது போல்

அடுத்தார் குடித்தார் அகன்றுவிட மனமின்றி
அடுத்தார் குடித்தார் அல்லும் மெல அகன்று
விடியும் வரைக்கும் விலகவில்லை, தங்களிரு
மெய்யும் துயிலவில்லை! ஆனாலும் அவ்விரவு
களங்கப் படவுமில்லை! கட்டழகர் தென்னரன்றோ!

(வேறு)

“விடிந்தது கண்ணே” என்றான்;
விழித்தவள் காதில் அஃது
‘ஒடிந்தது வீணை’, என்று
ஒலித்தது! எழுந்தார் ஆங்கே
விடிந்திடா இரவே! ஆனால்
விடிகின்ற நேரம் வந்து
படிந்திடக் கண்டாள். ஆகப்
படைஞர்கள் துயில்வா ரென்று

"பிரிந்திடு வோமா?" என்றாள்
பேச்சினில் ஏக்கங் கண்டு
"முறிந்திடாக் காதல் கொண்டோம்!
முல்லையே இன்று மட்டும்
பிரிந்திடு வோம்நாம்", என்று
பேச்சினை முடிக்கு முன்னே
பிறிதொரு முத்தம் வைத்துப்
பெருஞ்சுவை எடுத்துக் கொண்டான்.

புள்ளினம் "போதும்" என்ன,
பொழுது "நீ போவாய் அம்மா
வள்ளிசாய் நாற்பத் தெட்டு
வார்த்தமுத் தங்கள்" என்ன?
அள்ளிய பொன்னை விட்டு
அடைந்தநன் மார்பை விட்டுக்
கள்ளியின் நடையில் அந்தக்
களங்கமில் கன்னி சென்றாள்!

தெள்ளிய நீரும் கீழே
திரண்டநன் மணலும் மேலே
உள்ளவர் காணும் வண்ணம்
ஓடிடும் பரணி யாற்றுத்
துல்லிய நீராய்க் கன்னி
தொடர்ந்ததும் கன்னற் செல்வன்
முள்ளிலே போய்உட் கார்ந்தான்;
முன்பவர் இருந்த புல்தான்!

## 15

### ஏடீ தலைவி!

பயமெலாம் குறைந்து பாவை
பழச்சுவை நினைவைக் கொண்டு
வயமிலாள் ஆகி, மெல்ல
வதியுகூ டாரம் நோக்கி
மயலிலே சொக்கிச் சொக்கி
வருவதை ஒருத்தி பார்த்து
"தயவுதான் போலும்!" என்றாள்,
தயங்கினாள் வடுமாங் கண்ணி!

'ரதி'யெனும் பெயராள், காதல்
ரகசியம் கடந்த பெண்ணாள்
வதியுமற் றைந்து பெண்ணில்
ஒருத்திதான், அவள் தான் வந்த
மதியினைக் கேலி செய்தாள்
மனதிலே இன்ப வேட்கை
நதியெனப் பெருக நங்கை
சிரிப்பிலே அதையும் ஏற்பாள்!

சிரிப்புடன், கனியைப் பார்த்து,
"சிந்தையும் உடலும் நோக
மறுப்பிலாக் காதல் போலும்!
மாங்கனி அதிர்ஷ்டக் காரி!
சிவப்பெலாம் உதட்டை விட்டுச்
சென்றதே ஐயோ! காதல்
துடிப்பினுல் சிவப்பைத் தின்ற
துட்டனும் யாரோ?" என்ருள்.

தனக்கிலே எனும்பு கைச்சல்
தனிலவள் சொன்னு ளேனும்
நினைக்கிலா இன்பம் கொண்ட
நேரிழை துடித்தா ளில்லை!
அணைக்கவே முடியா தான
ஆசையிற் பெருந்தீ சூழ
மனத்துள உடலின் உள்ளே
மகிழ்ச்சிதான் பொங்கிப் பாயும்!

## 16

## எங்கே பகைவர்?

### (வேறு)

அழகுநகர்; இருபுறத்து ஏரிகொண்டு
அணிமணியாய்த் தென்னைமரம் சிலிர்த்து நிற்க
மழைமுகில்கள் வான்மூட, வெய்யி லின்றி
மந்தாரம் போட்டதுபோல், சிலுசி லுப்பில்
குழைமயில்கள் சுவரேறிக் கோட்டை சுற்றிக்
கூத்தாடக் காதலர்கள் நெருங்கிச் சேர்ந்து
இழையளவும் விலகாமல் கதப்புக் காண
இன்பமய மாயிருக்கும் பழையன் மோகூர்!

குறுநிலந்தான்! ஆனாலும் வேண்டு மட்டும்
கொடை கொடுக்கும் கையார்கள் மலிந்த பூமி
சிறுஇடந்தான்; என்றாலும் ஏழை யென்னும்
திண்டாட்டக் கூட்டமிலாச் செல்வ பூமி
ஒரு நகர்தான்...மோகூர்தான்—உண்டு ஆங்கே
உறையூரும் தோற்றுவிடும் அதன்வ னப்பில்!
திருமணஞ்செய் இளங்காதல் இருவர் அங்கு
சென்றுவிட்டால், வரமாட்டார்! வேறு என்ன?

கழையினிலே காற்றுவந்து பண்ணி சைக்கக்
கானத்தில் சிற்ருறு மெய்சி லிர்க்கும்.
குழைநகரின் மன்னவனும் பழையன், நெஞ்சில்
கூடிடுபே ராசையினுற் கெட்டி ருந்தான்!
விழைவறிந்த மோரியனும் அறுகை யென்பான்
வேண்டியதா லேசேரன் தண்டு கொண்டான்.
தழைபறக்கும் வடதிசையில் படைகள் வந்த
தணலான செய்தியினைப் பழையன் கேட்டான்.

தளபதியாம் மலைமேனி தனைய ழைத்துத்
"தானையுடன் போ!" என்று ஆணை யிட்டு
"களமதிலே படைநிறுத்தி நீபோய், யாரும்
காணுமல் உளவறிந்து வா!" என் றேத
உளவறியக் குறவன்போல் வேட மிட்டே
ஓடுகிருன் மலைமேனி வடக்கு நோக்கி!
வளையறியாச் சேரர்படை அதற்கு முன்னே
வாளெடுத்துப் பறந்ததனை அறியான், பாவம்!

# 17

## காளைக்கொம்பில் பாளைகள்

சேரர்படை இருந்தஇடங் தன்னில் வந்து
தின்றெறிந்த பொருள்களெல்லாம் கிடக்கக் கண்டான்
'வீரர்படை மோகஉருக் குள்ளிங் நேரம்
மேவிவிடும்!' என் றுமெல முணு முணுத்துச்
சேருமெழிற் கூடாரம் முற்றும் பார்த்துத்
தெற்கிருந்த கூடாரத் துள்ளே பார்க்க
மாரர்படை அங்கிருக்கக் கண்டான்! ஆமாம்
மாங்கனியும் மற்றைந்து பெண் ணும் கண்டான்

தன்னோடு வந்தசில வீர ரைக்கை
தட்டிஅவன் ஆங்கழைத்துச் செய்தி கூறிப்
''பொன்னோடு பிறந்தஇந்த அறுவ ரையும்
பொட்டாகத் தூக்கிப்போம் வனத்திற்'' கென்றான்.
மின்னாளின் காவலர்கள் அரவம் கேட்டு
வெகுண்டுவர மலைமேனி அவரைக் கொன்றான்
''இங்நேரம் என்ன இது சப்தம்.'' என்றே
எழுந்து வந்தாள் சூதறியா இளமாங் கன்னி!

மலைமேனி வீரரெலாம் திரண்டு வந்து
மாங்கனியைப் பூங்கொடிபோல் தூக்கிக் கொண்டார்
சிலைமேனிப் பெண்கள்மற் றைவர் தம்மைத்
திண்டாகத் தோள்மீதிற் போட்டுக் கொண்டார்!
"கலைமேனி போதும்! இனி நாடு வேண்டாம்!
கட்டழகும் பொன்கூட்டு வனமும் போதும்",
மலைமேனி இவ்வாறு சொல்லிக் கொண்டே
வாய்த்தரதம் மீதேறிக் காற்றாய்ப் போனான்!

மதங்கொண்டார் கைகளுக்குள் மாத ரெல்லாம்
வலியில்லார் ஆகிவெறும் கூச்ச லிட்டே
ரதத்துள்ளே சாய்ந்துவிடப் பாய்ந்து பாய்ந்து
நாலாறு காதவழி கடந்தார்; நெஞ்சில்
இதமில்லார் பொன்கூட்டு வனத்தை நோக்கி
ஏவிவிடப் பரியாவும் பசியெ டுத்தே
இரைதேடிப் போவதுபோல் ஓடிவந்து
இருநாழி கடப்பதற்குள் வனத்தில் நிற்கும்!

# 18

## வென்றிகொள் சேரர்தானை

### அரண்மனையில் ஒரு பகுதிப் படைகள்

படைகிளப்பித் தடைகடந்த சேரர் தானை
பகைநொறுக்கித் திடமுடுத்து மோசூ ருக்குள்
விடை முத்துப் பதில் "வெற்றி" எனவ ரைந்து
விள்ளரிய மகிழ்வுகொடு கோஷ மிட்டு
நடைமுடுக்கி அரண்மனைக்குட் செல்ல ஆங்கே
'நான் சரணம்' எனவிழுந்தான் மோசூர் மன்னன்,
இடைவளைத்து இருபெண்கள், பழையன் மக்கள்
இருவிழியில் நீர்பெருக நின்றார் ஆங்கே!

தென்னரசி பொன்னரசி இருவர் பேரும்
தெவிட்டாத நல்லழகின் உருவ மாகும்,
பொன்னரசி இளையமகள், புத்தர் கொள்கை
போற்றிவளர் சமதர்மம் பூத்த உள்ளம்!
தென்னரசி கலைச்செல்வி, தமிழர் கல்வி
தேர்ந்தமகள்; வீரத்தில் சிறுத்தை யன்னாள்!
இன்னமுதைப் பாத்திரத்தில் இருந்தா லென்ன?
எள்ளளவும் சுவைகுறையப் போவ தில்லை!

தந்தையொடு மகளிருவர் சரண்பு குந்தா
தானையிலோர் அணித்தலைவன் தளிவேல் என்பான்
முந்தி அவர் மூவரையும் அரண்மனைக்குள்
மூடிஅதைச் சிறையாக்கிக் காவல் போட்டான்;
நிந்தையிலாச் சுதந்திரத்தில் வாழ்ந்த பூமி
நெடுஞ்சிறையாய் ஆகிவிடப் பழையன் சோர்ந்தான்
விந்தையிலை! ஆள்பவரைச் சிறைக்குள் தள்ள
வெகுநாட்க ளாகாது வீர ருக்கு!

## கோட்டையில் அடலேறு

மோகூரின் காவன்மரம் வேம்பு தன்னை
முடியோடு கீழ்ச்சாய்த்துப் பலகை யாக்கி
வாகான ரதம்படைக்க முயன்றார் வீரர்
மற்றவர்கள் கரிக்கோட்டம் போனார் காண
சாகாத சரித்திரத்தின் பகுதி யாகித்
தண்ணளியான் அடலேறு யானை யேறி
மோகூரை வலம்வந்தான்; நாடு வாழ்த்த!
முன்புகுந்த கோட்டைக்கே மீண்டும் வந்தான்!

## தெருவில் சில வீரர்

கட்டுப்பா டற்றவர்கள் சிலபேர் ஆங்கே
கண்டவரைக் கைதொட்டே இழுக்க லானார்
தட்டுப்பா டானாலும் கற்பை விற்கச்
சம்மதியார் நற்குலத்திற் பிறந்த மக்கள்!

வெட்டுப்பட் டார்மூவர் பெண்டிர் கையால்;
வெட்கமென்ன நல்வீரர் மீண்டும் வெட்ட!
கட்டுப்பா டற்றவர்கள் எங்கி லும்எக்
காலத்தும் உண்டென்றக் காட்சி சொல்லும்.

## கோட்டையில் அடலேறு

அடலேறு இச்செய்தி கேள்விப் பட்டான்
“அக்கிரமக் காரர்களை என்னி டத்தில்
உடனேபோய்க் கொணர்வீர்!” எனப் பணித்தான்!

கங்கன்

ஓடிப்போய் மூவரையங் கிழுத்து வந்தான்
“விடமான நெஞ்சேநீ மடிந்து போவாய்
வீரர்களின் நாட்டிலிது கூடா”தென்று
திடமான வாளெடுத்து எடுத்த வீச்சில்
சீவிவிட்டான் தலைமூன்றை நாடு வாழ்த்த!

## அரண்மனையில்

“பகையழித்தோம் குதிரைக்குக் கயிறு தேவை
பழையன்மக ளிருவரையும் கொணர்வீர்! வாடா
முகையெடுத்துச் செண்டாக்கி முடிந்து போட்டு
முழங்காலில் மோதவிடும் கருநி றத்துச்
சிகையறுப்போம் கயிருக்கிக் கொள்வோம்,”—என்று
செப்பினான் அணித்தலைவன் தளிவேல், ஓடி
நகைவடித்த மின்னாரை ஒருவன் கட்டி,
நடுத்தெருவில் நிறுத்தினான், அழுதார் பெண்கள்

## அரண்மனைத் தெருவில்

கோட்டையினின் றடலேறு வந்து விட்டான்
கோதையரில் பொன்னரசி கூந்தல் மட்டும்
சாட்டையென அறுபட்டுக் கீழ்க்கி டக்கும்
தலைகாத்துத் தென்னரசி எடுத்து நின்றாள்!
பாட்டையிலே அடலேறு கோரம் கண்டான்!
பளிச்சென்று இறங்கினான்; வாள்ப றித்தான்
சாட்டையினால் தளிவேலைப் புடைத்தான் வீரச்
சன்னத்துப்பட்டயங்கள் பறித்துக் கொண்டான்:

"யாரைக்கேட் டிச்செயலைச் செய்தாய்? கோழை
அடங்தடுக்கும் வாள்கொண்டு அழக ழித்தாய்
சேரர்க்கே இழிவாகும் செய்கை செய்தாய்
தெருவிலுனை நாய்போல இழுக்கச் செய்வேன்
வீரர்க்கே இது அழகு வேட்டை நாயே
வெறிச்சிட்ட பாலைக்கா நீபி றந்தாய்
பாருக்குள் உனைப்போட்டாள் பெண்தா னேடா?
பழிகாரா! வஞ்சியில்வா கவனிக் கின்றேன்!"

சிங்கமென முழக்கினான் சேரச் செல்வன்
திரும்பினான் நங்கையர்பால் தலைகு னிந்து
"எங்களிறை வெறுக்கின்ற செயலைச் செய்தான்
இழிகுணத்தான்! மோகூரின் வேந்தன் பெற்ற
தங்கங்காள் தளிர்க்கொடிகாள் பாண்டி நாட்டுத்
தண்பொழிலில் விளையாடி யிருந்த உம்கண்
பொங்கிடல்எம் கொள்கையல மன்னி யுங்கள்
பொன்மேனிப் பெண்டிரைநான் துன்புறுத்தேன்

தந்தையொடு உம்மையும்நான் விடுவிக் கின்றேன்.
தண்ணளியான் எம்சேரன் எண்ண மெல்லாம்
சிந்தையினிற் பயங்காட்டி என்ப தல்லால்
சிறிதேனும் நாடுகொளும் ஆசை யில்லை.
இந்த இடம் இனிமேலும் உமக்கே!'' என்ன,
இளமனத்தான், பழையனையும் விடுவித் திட்டான்!
பந்தமொடு பழையனவன் பக்கம் வந்து
பாசத்தால் அணைத்திட்டான் கண்ணீர் சிந்த.

''உடன்பிறந்தார் இருவருக்குள் மோதல் காண
ஒருவர்அதில் தோற்றாலும் தோல்வி யல்ல
திடம்பெறுவீர்!'' எனச்சொன்னான் சேர வீரன்
திருந்தியநற் பழையன் அதை ஏற்றுக் கொண்டான்
மடம்பொருத்தித் தென்னரசி அவன்பால் வந்து
''வருக! எங்கள் மனையினிலே விருந்து!'' என்றாள்;
நடம்பயிலும் பொன்னரசி முக்கா டிட்டு
நடந்திட்டாள், அரண்மனைக்குள் வந்து சேர்ந்தார்.

## அரண்மனையில்

தென்னரசி ஓடிப்போய்க் கனிய றுத்துத்
தெவிட்டாத மலைத்தேனோர் தட்டில் வைத்துப்
பொன்னரசி யிடந்தந்து, பாலும் நெய்யும்
புதிதாகக் குவளையிலே சேக ரித்து
நன்னயமெய் அடலேறு அருகில் வந்து
நளினசுகந் திரண்டாற்போல் நகைமு ழக்கி
''இன்னமுதம் உண்க!''வென வைத்தாள்; உண்ண
எவர்மறுப்பார்? அடலேறும் உண்டான் கொஞ்சம்

வாழைதரும் கனியுண்டான், பலாவும் உண்டான்
தகையோடு மாங்கனியைத் தொட்டான்; ஐயோ!
"பேழையிலே இணைத்தநகைப் பெண்ணுள்; தம்மைப்
பெருங்கான வெளியினிலே விட்டு வந்தோம்
சோழிவிழி என்னுளுள்!" எனப்ப தைத்துத்
தொட்டகனி தூக்காமல் விட்டு வந்த
தாழையினை, "மாங்கனி!"என் றழைத்த வாறு
தாவினுன் தன் குதிரையிலே பறந்தான் போனுன்!

தென்னரசிக் கேதொன்றும் புரிய வில்லை
தேன்குறையோ, பால்குறையோ எனத்தி கைத்துப்
பொன்னரசி தனைப்பார்த்தாள், அவளோ அங்கு
பூத்திருந்த மலர்போன வழியைப் பார்த்தாள்!
"கன்னலினை மறந்தோ"மென் றெண்ணித் தந்தை
கவலையினுல் கோபித்தே மகவைப் பார்த்தான்!
பொன்னை, ஒளி மறந்திருந்து தேடி ஓடும்
புதுக்கதையை அவரெங்கே அறிவார்; பாவம்!

## 16

## "சா" வென்று பிரிந்தனையோ ?

(வேறு)

குளம்மட்டும் இருந்ததங்கே; குமுதம் இல்லை!
குலைக்காம்பு நின்றதங்கே; கனிகள் இல்லை
களம்மட்டும் இருந்ததங்கே; வாளைக் காணோம்;
கடைகண்டான் அடலேறு; பொருளைக் காணோம்!

மனமில்லை! உயிரில்லை! தலைக னத்து
மலையாதல் போல்தோன்ற நினைவி ழந்து,
"அனமில்லை! கனியில்லை! ஐயோ! கண்ணே!
அஞ்சுகமே என்னுனுய்? எங்கே சென்ருய்?"

எனக்கீழே பதைப்புற்றுச் சாய்ந்து மண்ணில்
எழுகடலின் நீரெல்லாம் விழியிற் சேர்த்து
மனக்குற்றம், உடற்குற்றம் அறியா மங்கை
வதைப்புற்றுப் பேசுவாளென் றெண்ணி யெண்ணி

## மாங்கனி

### (பாட்டு—வேறு)

பொன்ஞர் திருவே!
புதுநிலவே! தண்மேனி
மின்னே! கனவின்
வியனுருவே! எங்குற்ருய்?

மேகங்கள் என்று
விளித்ததனுல், கார்கூந்தல்
காகங்கள் போலே
ககனத்துப் பாய்ந்ததுவோ!

பிறையென்று கூறிப்
பிணைத்ததனுல், நுதல்நீல
நிறவானம் ஏறி
நிற்கப் பறந்ததுவோ

நீலமலர்ச் சோடு
நிலவும் இருவிழிகள்
கோலக் கொடியேறக்
குப்பென்று பயந்தனவோ!

மாங்கீற்றுக் கன்னங்கள்
வாங்கியமுத் தங்கள் சொல
மாங்காடு நோக்கியடி
வைத்து நடந்தனவோ!

## மாங்கனி

இட்டிட் டெடுத்தஇதழ்
இன்பரசம் தீர்ந்ததெனக்
கொட்டிக் குடித்துவரக்
கொம்புத்தேன் நாடியதோ!

முல்லைப் படைவந்து
மூண்டதெனக் கூறியதால்
பல்லெட்டு நான்கும்
பறந்துகொடி யேறினவோ!

வில்லாம் இருபுருவம்
வீரர்கரம் மேவிவிடச்
சொல்லாம லேஓடிச்
சூரர்நகர் புக்கனவோ!

சங்கேபோ லும்கழுத்துச்
சத்தமிட்டுப் போர் முழக்கச்
சிங்கத் திராவிடர் கை
சென்றேறிக் கொண்டதுவோ!

புல்லுவான் போயதனால்
புலியாகத் தென்றல் வந்து
கொல்லும் வாள்போலே
கொன்று மறைத்ததுவோ!

## மாங்கனி

இட்டு வளைத்தவுடன்
இளங்கொடிபோல் முழங்கையில்
கட்டுப் படும் இடைதான்
காற்றிற் கரைந்ததுவோ!

கோர்த்துப் பிணைத்தவுடன்
கொதிப்பேற்றும் கையிரண்டும்
வேர்த்துக் கரைந்துருகி
விழுந்ததுவோ மண்மீது!

பூம்பாட்டுப் பாடிப்
பொன்கூட்டை எனக்கீந்த
மேம்பாட்டுப் பூங்குயிலே
விரைந்த இடம் ஏதோடி!

சில்லென்று பூத்த
சிறுமுல்லைக் காட்டுடு
வல்லாடுங் காய்கள்
வடித்த எழில் எங்கேடி!

வேய்போலும் தோளில்
விளையாடிக் கைதழுவிச்
சேய்போலே நானணையச்
சிலிர்க்கும்உடல் எங்கேடி!

## மாங்கனி

இன்ன இடமென்
றில்லாமல் முத்தமிட்டுக்
கன்னி யிருந்த
கனியுடலம் எங்கேடி!

மெல்ல இதழ்தொட்டும்
வேகமுற அணைத்தும்
பல்லைக் கடித்தபடி
படித்தநூல் எங்கேடி!

தொட்டால் ஒரு சுவையும்
தொடப்போமுன் ஓர் சுவையும்
கிட்டத்து நின்றால்
கிளர்ச்சிதரு ஓர் சுவையும்.

பார்க்கும் விழிக்கூட்டுப்
பார்வைக்கு ஓர் சுவையும்
சேர்த்துப் பிறந்த
திருமேனி எங்கேடி!

பட்டால் வலியெடுக்கும்
பனிமலரும் முள்ளாகும்
பட்டாகும் இருபாதம்
பறந்தஇடம் எங்கேடி!

## மாங்கனி

முன்னடிக்குப் பாதி உயிர்
முத்தாகத் தூக்கிவைக்கும்
பின்னடிக்குப் பாதி உயிர்
பெறும்பாதம் எங்கேடி!

காற்றுக்கு மேற்சென்று
கணத்துக்குள் கீழிறங்கும்
நாற்றுநிறப் பொற்சேலை
நடிக்கும்உடல் எங்கேடி!

முல்லைப் பூப்போல
முறுவல் தவழ்ந்தாடக்
கல்லைக் கனியாக்கும்
கட்டழகு எங்கேடி!

ஊரார்க்குச் சொந்த
உடலாய்ப் பிறந்தாலும்
சீராரும் கற்பில்
தெளிந்த உடல் எங்கேடி!

போருக்கும் கலைக்கும்
பொருந்தாது என்றெண்ணிக்
காருக்குள் ஓடிக்
கண்மறைத்துக் கொண்டாயோ!

## மாங்கனி

வாள் தாங்கிப் போரிடுவான்
மலர் தாங்கிப் போர்புரிய
மீளான்என் றெண்ணி
மெய்வந்து மாண்டனையோ?

பொன்மாலை சூட்டிப்
புதுமேனிக் குள்ளொடுங்க
உற்றாரொப் பாரென்று
ஓடிமறைந் தனையோ!

முத்தங்கள் கொண்டதனால்
மோகத்தீ மூண்டுவிடக்
கொத்தோடு அத்தீயிற்
கொடிவெந்து போனதுவோ!

வானத்து வெண்மதிக்கு
வையத்துக் காதலின்ப
ஞானத்தை ஓதிவர
நத்திப் பறந்தனையோ!

உள்ளம் விரும்பாமல்
உடல்விரும்பும் தீஅரவுக்
கள்வர்உனை வருத்திக்
கவர்ந்துவெளி யேறினரோ!

மாங்கனி

நல்லுடலே பேரின்பம்
நாவுக்கும் மனத்துக்கும்
இல்லையதில் தொடர்பென்று
எண்ணிக் கவர்ந்தனரோ!

கூட்டில் உயிராடக்
குமையுமனங் கொதிப்பேற
வாட்டிஎனை வருத்தி
மறைந்தாயோ மாங்கனியே!

(வேறு)

அழுதான்; துடித்தான்; அடுதீயில் வீழ்ந்த
புழுவாய்த் துடித்துப் பொசுங்கினான்—வழுவாத
பூங்கொடியை எண்ணிப் பொருமினான்; புதுப்பாட்டுத்
தீங்குயிலைக் கூவி(த்) தேடினான்,—ஆங்கழகுப்
பெட்டகத் திற்புத்தி பேதித்தான்; கையிறுக்கிக்
கட்டகத்தை எண்ணிக் கதறினான்,—ஒட்டுமரம்
விட்டகனி யெண்ணி விம்மினான்; இதழ முதைத்
தொட்டசுவை எண்ணித் துடிப்புற்றான்,—பட்டமரம்
ஆனேனே என்று அலறினான்; அழகிருந்து
போனஇடம் பார்த்துப் புலம்பினான்;—வானமழை
கண்ணீராய்ச் சிந்திக் கலங்கினான்; கானமொழி
பெண்ணாளைக் காணாப் பிளை!

# 20

## தன்னலம் பகைமை நல்கும்!

(வேறு)

அணித்தலைவன் தளிவேலும் பகைவ னுனன்
அடலேறைப் பழிதீர்க்க முடிவு கொண்டான்
மணிப்படையில் ஐம்பத்து ஆறு பேரை
வலைவீசித் தன்கைக்குள் போட்டுக் கொண்டான்;
கணிக்காடன் எனும் வீரன், குதிரை யெல்லாம்
காப்பானும் அவன்பக்கம் சாய்ந்து விட்டான்
இனித்தான சேரர்படை தன்னில் மற்ற
எவரும் அவன் பக்கத்திற் சேர வில்லை.

கங்கன் இதை அறிந்தபடி அடலே றண்ணல்
காதுக்குச் சொல்லிடவே ஓடிப் போனுன்.
இங்கிவர்கள் ஆபத்தை உணர்ந்து கொண்டார்;
எல்லோரும் புறப்பட்டார்; மறைந்தார்; மோகூர்த்
தங்கநிலக் குறுவேந்தன் நிலையறிந்து
தன்படையைத் துரத்திவரப் பணித்துவிட்டான்,
சிங்கமெனிற் கூடாரந் தன்னைப் பார்த்து
தேம்பியவா றங்கேயே திகைத்து நிற்கும்!

# 21

## ஏடா! தலைவா! அறிந்திலையோ?

ஓடிவந்த கங்கன் அட லேறைக் கண்டான்
ஒளியிழந்த வானத்தின் மேனி போல
தேடிவந்த சேதியினை உடன்சொல் லாமல்
திணறி "ஆபத்" தென்றே அரற்று கின்றான்;
கேடுவந்த சேதியினை அறியாச் செல்வன்
"கெட்டதுஎன் உயிர்," என்றான், கனியை எண்ணி;
'மாடுவந்து மிரண்ட!' தெனக் கங்கன் கூற
மறுபடியும் "ஆம்! என்றன் மயிலைக் காணோம்!

தீயர்களுக் கிரையானாள் போலும்!" என்றான்;
"தென்னவனே! தளிவேலன் பகைமை கொண்டு
பேயனென ஆட்சேர்த்துப் படைகூட் டத்தைப்
பிரித்திடத்தான் நினைக்கின்றான்; வாரும்!" என்றான்;
தோயுமெழிற் செல்வனதைக் கேளா னாகித்
தூக்கத்தில் நடப்பதுபோல் நடந்தே சென்றான்
பாயுமிரு குதிரைகளிற் கங்க னோடு
பறக்கவில்லை; மெல்லத்தான் போனான் செல்வன்.

## 22

## குறைவறு கோதை சிறையுறு காதை?

அறுவரையும் பொன்கூட்டு வனத்தி னுள்ளே
அமைத்திருந்த சிறுவீட்டில் அடைத்துப் போட்டு
மருமனத்து மலைமேனி கொக்கரித்தான்,
"வாய்த்ததடா சரியான கிளிகள்!" என்று
முறுவலெலாம் விடைவாங்கிப் போன மங்கை
முகஞ்சிறுத்து மணிமணியாக் கண்ணீர் சிந்தி
"சிறுமையில் நாம் பலியாவோம்!" என்றே எண்ணிச்
சிலையாகச் சமைத்துவிடப் பொழுதுஞ் சாயும்!

இராப்பொழுது வரவும் அவர் கிடந்த வீட்டின்
இடக்கதவை மலைமேனி திறந்து, உள்ளே
புருப்பிடிக்கப் போவான்போல் மெல்ல மெல்ல
போய்ப் 'படக்'கென் றொருபெண்ணைப் பிடித்துக்
கொண்டான்!
பொருப்பெண்ணாள், 'ஓ'வென்றே கூச்சல் போடப்
பொங்கியவன் இறுக்கித்தன் மார்பிற் சேர்த்து
நிலாப்பெண்ணின் முகம்நெற்றி கண்கள் யாவும்
நிறுத்தாமல் முத்தமிட்டுக் கடித்தும் போட்டான்!

மாங்கனியும் மறுநான்கு பேரும் கண்டு
மனம்பதைத்துக் கண்மூடப் பாழ்ம னத்தன்
தீங்கிழைத்தான் எருமைமலர் மிதித்தாற் போலத்,
தின்றுவிட்ட பாண்டத்தை எறிந்து விட்டுத்
தாங்கிவிட்டான் மற்றொருபெண் நாயைப் போலத்
தடங்கண்ணாள் மெய்சோர்ந்து கீழே சாய்ந்தாள்
வாங்குகிற மேல்மூச்சிற் பேய்க்கு ணத்தான்
மாறாத வெறியாட்டம் ஆட லானான்.

இருபெண்கள் சோர்ந்துவிழ மூன்றாம் பெண்ணை
எட்டியவன் பிடிக்கின்ற காட்சி கண்டு
கிறுக்கானாள் போலேமாங் கனியாள் அங்கு
கிடந்தஒரு பலகையினைத் தூக்கிக் கொண்டு
நறுக்காகத் தலையினிலே அடித்தாள்; வாயில்
ரத்தத்தைக் கொட்டி அவன் மயங்கி வீழ்ந்தான்;
சறுக்காத பாதத்தாள் உயிரே யன்றித்
தடங்கற்பைப் பலிகொள்ள இசையா ளானாள்.

மலைமேனி சாயுங்காற் போட்ட கூச்சல்
மற்றிருந்த வீரர்களை விழிக்கச் செய்யக்
குலையாத தூக்கத்தில் எழுந்து வாளைக்
கொண்டுள்ளே சென்றார்கள்; காட்சி கண்டு
நிலைமாறி மதிமாறிப் பெண்கள் தம்மை
நெருக்கியவா றட்டூழி யங்கள் செய்தார்;
சிலைமேனி மாங்கனியும் மற்றோர் பெண்ணும்
தீரமுடன் போராடித் திறந்தி ருந்த

வாசல்வழி ஓடிவிட்டார்; கல்லும் முள்ளும்
வாட்டிவிட விரைந்தங்கே ஓடும் போதும்
பாசமொழி மாங்கனியாள் பள்ள மொன்றிற்
பதறிவிழுந் தாள்; நெற்றி பிளந்தே போகும்,
தாசிமகள் என்ருலும் கற்புக் காக்கும்
தமிழமகள் சேரமகள் மூர்ச்சை யாக
மோசமெனச் சிலவீரர் ஓடி வந்தார்;
முதற்சிகிச்சை செய்துடனே சிறையிற் போட்டார்.

தெளிவுற்ற மலேமேனி மெலள ழுந்து
தெருப்பக்கம் வர, உள்ளே பெண்கள் மட்டும்
களேப்புற்றும் குலேப்புற்றும் காயங் கொண்டும்
கண்ணயர்வார்; கதவுகளேப் பூட்டிக் கொண்டே
வளேப்புற்றுக் கருநாகக் கூட்டம் போக
வார்குழலார் நால்வருமாய் மெலள ழுந்து
பிழைப்பற்றுப் போகுமெனு நிலேயிற் ரேன்றும்
பெண்ணரசி மாங்கனிதன் அருக மர்ந்தார்.

# 23

## தானே தனக்குத் துணே!

(வேறு)

நீலவானத்தில் நிலவு சிரித்திட
நித்திரைவிழி மேவ மறுத்திடக்
கோலமார்பிணைத் தென்றல் வதைத்திடக்
குழம்புநெஞ்சக முற்றுங் கொதித்திடச்
சாலமேனியின் தனியொரு பாகமும்
தணல்படிந்துமெய் வேர்த்து விதிர்த்திட
ஆலமுண்டவன் போல மேல்மணை
அணையிலேகிடந் தானட லேறரோ!

மைநிறக்குழல் வளித வழ்ந்திட
வலைநிகர்திரு விழிஅ சைந்திடக்
கைவளைத்தொடி கவிஇ சைத்திடக்
கனிஇதழ்க்கடை துடிது டித்திடத்
தொய்வரைந்திடு நெஞ்சு விம்மிடச்
சொல்பிறப்பினும் தொண்டை கம்மிடக்
கைஇரண்டில் மாங் கனிகள் ஏந்திமெய்
கமழு தென்னர சிக்கினி போந்ததே!

வந்துநின்றது காண மறந்தனன்
வருமுன்ஓடிய மணமும் நுகர்ந்திலன்
மந்தமானது செவிகளென்னவே
மலரணைக்குமேல் வாடி நின்றனன்
அந்தமாங்கனி விழிமறைந்தபின்
ஆவிநின்றன? போயென? என்பதே
சிந்தையொன்றியச் செல்வன் எண்ணியும்
சீவன் தேற்றமிலாதிருந்தனன்!

"பால்" எனச்சிறு பாவை கூறலும்
"பாழ்" எனப்படு மாறுகிடந்தவன்
சேல் விழிக்கடை சித்திரத்தினள்
செப்புமொன்றையும் கேட்டிடாமலே,
"வேல்படிந்தது நெஞ்சில்!" என்றனன்
"விட்டவன் பகையா"ரெனக் கேட்டுடன்
"மேலுடம்பினிற் காயம் இல்லையே!
விளங்கச் சொல்"கெனும் சூதறியாதபெண்!

மாங்கனியே நினைவாகிப் புவிமறந்து
மதிகலங்கி அரண்மனையின் மேன்முற்றத்தில்
தாங்கவொணுத் துயரோடும் இருந்த பிள்ளை
தையலவள் தென்னரசி மொழியைக் கேட்டும்
ஆங்கிருப்பதாரென்றே, பேச்சென்னென்றே
அறியானுய்ப் பித்தாகிச் சாய்ந்திருந்தான்,
தீங்குவளை விழிமாது வீணை மீட்டித்
தேன்பாயுங் கவிபாட உறங்கிப் போனுன்.

## 24

## அறியாப் பொழுதே! புலர்க!

(வேறு)

கங்குற் கடல்கிழித்துப் பரிதி தோன்றும்
கலகலப்பில் இரவமைதி மறைந்தே போகும்;
தங்கச் சிலைக்கனிகள் ஆள ரோடும்
சமர்முடித்த கதைஎண்ணி நீரில் மூழ்கும்;
துங்கப் புதுப்பருவக் கன்னிப் பெண்கள்
தொல்லைஇராச் சென்றதென விழியாற் சொல்லும்;
எங்கும் மலர்ந்ததன்பின், அடலே றுள்ளம்
"இல்லை அவள்!" எனநினைந்து விழிதி றக்கும்!

## 25

### அவளும் காண வருக!

(வேறு)

வண்ணமலர் தாமரைமேல் மலைப்பாம் பொன்று
வந்ததுபோல் நெற்றியினிற் கட்டுக் கட்டிப்
பண்ணமரும் நாவாள்மாங் கனிப்ப னிப்பூ
படுத்தஉடல் அசையாது விழித்தாள்: ஆங்கே,
கண்ணிடுக்கில் நீர்தேக்கிக் கங்குல் முற்றும்
காட்சிக்கும் இமைக்காத விழியா ரான
பெண்ணமுத நால்வரையுங் கண்டாள்; வாயிற்
பேச்சின்றி முகம்பார்த்தாள் கற்பின் செல்வி.

## 26

## வாளுக்குத் தப்பிய வேல்!

பள்ளத்தில் மாங்கனியாள் விழுந்த காட்சி
பார்க்காமல் அவ்வொருபெண் ஓடி ஓடி
வெள்ளத்தைக் கடந்தவள்போல் மூச்சு வாங்கி
விழுந்தெழுந்து ஓடினுள் மோகூர் நோக்கிச்
செல்கின்ற பாதைக்கு வந்து சேர்ந்து
செம்பஞ்சுப் பாதங்கள் நடவா தாக
வெல்கின்ற மொழிமாது வீழ்ந்து விட்டாள்
விடிந்ததுநாள், கதிர்தழுவக் கண்மலர்ந்தாள்.

# 27

## ஓ! என் தாயகமே!

(வேறு)

‘‘வென்றி கொண்டதும், வீரர் வழியினில்
வெற்றி பெற்றதைப் பகைக்கென ஈந்ததும்
மன்றில் ஏறிஅவ் வஞ்சி நகர்ப்புறம்
வாழ்த்து மாறு முழக்கிடுவோம்!’’என
நன்று எண்ணிஅச் சேரர்தந் தானையும்
நலிமனத் தடலேறவன் முன்வரச்
சென்ற காட்சியைத் தென்னர சிக்கனி
சிந்தை கண்டுமெய்சி லிர்த்தன ளாரரோ?

நெஞ்சில் ஒன்றிய காதல் உரைத்திட
நேரமின் றிஅவ் வீரர் போம்வழி
வஞ்சி கண்டனள்! செய்திகள் சொல்லிட
வைத்த கண்ணில் வலிமையி லாததால்
கொஞ்சு மாந்தளிர் குழையும் மலர்க்கொடி
கொண்டல் பார்த்துநற் குழல்ச ரிந்திட
வஞ்சிபோம் அட லேறவன் பின்னரே
வார்த்தை போகிவாய் மூங்கைய ளாகினள்.

ஏறு ஏறென எட்டி நடந்திட
எங்கும் நாமெனக் கொட்டு முழக்கிட
வீறு மேவிடு வெங்கடற் றுணைகள்
மேவி மேவி நல் வஞ்சி நகர்மனம்
ஊறி ஊறி உணர்ச்சி வயத்தினில்
ஓடி வந்து, அருவியின் சாரலில்
ஆற எண்ணியும், இன்ப மளித்திட
ஆடிப் பாடிடும் அனங்கள் காண்கிலார்!

## 28

## நாய்க்குத் தப்பி, நரியின் வாயிலே

(வேறு)

முகைமுடித்த சிகையறுத்து மூக்க றுந்த
முதல்அணியின் தனித்தலைவன் தளிவே லென்பான்
பகை முடிக்க ஐம்பத்து ஆறு பேரைப்
பதமாகத் தன்பக்கம் சேர்த்துக் கொண்டு
நகைமிகுத்துக் குதிரைகளில் ஏறி நேரே
நடக்கின்றான், பொன்கூட்டு வனத்தை நோக்கித்
தகையழிந்த இளம்பெண்ணாள் "ரதி" அங் கேதம்
தானையொடுந் தளிவேலைக் காண லுற்றாள்!
"ஓ!" னெவே வாய்பிளந்து கூச்ச லிட்டாள்
ஓடிவரும் குதிரையெலாம் அவள்பக் கத்தில்!
"கா!" வெனவே தளிவேலின் காலில் வீழ்ந்தாள்
கலைகிழிந்த ரதிமாதைத் தளிவேல் கண்டு
"ஆ! அனமே! என்னானீர்! செய்தி யென்ன?
அலறாமற் சொல்க" வெனக் கேட்க, மாது
"தீமனமே உருவான கொடியன் எம்மைத்
திருடிவந்தே அடைத்திட்டான்!" என்றாள் தேம்பி

“வீணைச்சொல் மாங்கனியாள் எங்கே?” என்றான்;
“மின்னாகப் பின்வருவீர்! காண்பீர்!” என்ன;
ஏணைக்குள் மொழிபேசும் குழந்தை தன்னை
எடுப்பதுபோல் அவளைஅவன் எடுத்துக் கொண்டான்
நாணைத்தாம் சரிபார்த்து வீர ரெல்லாம்
நடந்தார்கள் அவள்காட்டும் வழிப்பக் கத்தில்
தேனைச்சேர் மொழியாளை அடைத்தி ருந்த
சிறுவீட்டின் பின்பக்கம் வந்தார்; நின்றார்.

குதிரையின்கா லடிகேட்டுச் சன்ன லூடு
குறிப்பாகப் பார்த்திட்டாள் ஒருத்தி; ஆங்கே
கதையினில் படிப்பதுபோல் ஆபத் துற்ற
காலத்தில் வந்ததளி வேலைக் கண்டாள்
பதைப்புடனே, “மாங்கனி! வா! தளிவே லண்ணன்,
பலவீரர்; காப்பாற்ற வந்தே விட்டார்;
வதைப்பினிமேல் இல்லையடி!” என்றாள், கன்னி
வலிமறந்து, சன்னலிலே வந்து பார்த்தாள்!

காவலுக்கு ஒருவீரன் மட்டும் வைத்துக்
கதவடைத்துச் சென்றமலை மேனி இன்னும்
ஆவலுக்குத் திமிரிலாத தாலே அங்கே
அணுகவில்லை; அதனாலே ‘தளிவேல்’ வாளின்
சீவலுக்கு ஒருதலைதான்; பெண்கள் தம்மைச்
சிறுசிலைபோற் சிட்டாகத் தூக்கிப் போனான்;
கோவிலுக்குள் இருந்தவரை நாய்கள் கொள்ளக்
கொடுநரியே பறித்ததென அறியார் பெண்கள்!

## 29

### விலைக்குச் சிலை!

ஆரியர்தம் மனம்போலும் காடு; தீப்பாய்
அவர்கள்குண நலம்போலும் கோடு, நாளிற்
சூரியனும் கதிர்பாய்ச்ச முடியா மேடு;
துளிவிஷத்தில் உயிர்போக்கும் பாம்புக்கூடு;
'தாரைமலை' என்கின்ற பெயரில் யாரும்
தடம்போட்டுத் திரும்பாத மலையின் கீழே
'சூரபதன் என்பானின் ஆட்சி; அங்கே
துட்ட மனம் கடைச்சரக்கு; கேட்பா ரில்லை!

தளிவேலன் மாங்கனியை அங்கே கொண்டு
சரக்குவிலை கூறியதும் லட்சம் பொன்னைக்
கொலைகாரச் சூரபதன் தந்தான்; பெற்றான்;
கொடும்பாம்புக் குட்டியின்வாய் மீனைக் கவ்வும்;
விலைமாது விலையானாள்; வேங்கை வாயிற்
கலைமானாய் அடைபட்டாள்; கற்பும் இந்நாள்;
நிலையாதோ என்றெண்ணி நெட்டு யிர்த்தாள்;
நீலவிழி சிவப்பேறச் சவமாய் நின்றாள்.

பொன் லட்சம் பெற்றவுடன் தளிவேல் எங்கும்
போகாமல் அங்கேயே இருக்கை கொண்டான்
பெண்மானை மறுபடியும் கவர்ந்து செல்லப்
பெருந்திட்டம் தீட்டியவா றிருந்தான்; அந்தக்
கண்கெட்ட சூரபதன் சிலநா ளைக்குள்
கல்யாணம் அவளோடுந் தனக்கே என்று
தன்கொட்டைப் பல்தெரியக் கூவித் தீய
தளிவேலை அங்கேயே வைத்துக் கொண்டான்.

## 30

## கடைகள் திறமினே!

வரவேற்பு, முழக்கொலிகள், வீர வாழ்த்து!
வழியெல்லாம் மலர்தூவல், பார்வை வாழ்த்து!
சிறுவேற்கண் முகைமாதர் மாலை சூட்டல்,
தென்னாட்டுக் கும்மி, அதில் வளைமு ழக்கம்!
பெருமார்பை மலராலே குறிப்பாய்ப் பார்த்துப்
பிறழாமல் அடித்தார்தம் கணவன் மாரைத்
திருநாளே வஞ்சிதனில்! ஆனா லும்ஓர்
சீவன்தான் "துக்கவிழா!" எனநி னைக்கும்!

கிழவியவள்-மாங்கனியின் அன்னை-கண்ணைக்
கீழ்மேலாய்ச் சுழற்றியவா றங்கு மிங்கும்
குழவியினைத் தேடுகிறாள்; பல்லக் கில்லை!
குடுகுடுவென் றேயோடி ஒருவ னைப்பார்த்(து)
"அழகா! என் மகளெங்கே?" என்றாள்; வீரன்
"ஐயய்யோ! இறந்துவிட்டாள்!"எனப்பு கன்றான்
அழுதபடி, "கண்ணே!"என் றலறி அன்னை
அவ்விடத்தே விழவும்,உயிர் பறந்தே போகும்!

## 31

## வாழ்த்தினன் சேரர் கோமான்!

(வேறு)

“வென்றிகொள் வீர நாட்டின்
மொய்ப்புதல் வீரே வாழ்க!
இன்றுமை இங்கே காண
என்மனம் மகிழ்கூத் தாடும்
துன்னலர் தோற்ரு ரேனும்
தூய்மையாய் அவர்க்கே, சொந்த
மண்ணினைத் தந்தீர்; நீவிர்
வையநாள் வாழி! வாழி!”

என்றனன் சேரர் தந்தை
எல்லவ ரும்தேன் பெற்ருர்
நின்றனன் அடலே றண்ணல்
நெடுமரம் போலே அங்கு
சென்றனன்; அமைச்சர் பாலும்
செப்பிலன் காதல் நோயை
ஒன்றினை—‘மறைந்தா ளென்ற
உண்மையை’ மட்டும்—சொன்ஞன்.

வருந்தினர் அழும்பில் வேளார்
மாங்கனி மறைவை எண்ணி,
விருந்தையும் உண்ணு ராகி
விழியிடைப் புனலே சிந்தி,
"அருந்தமிழ்ப் பெண்ணுள் போனுள்,
அழிந்தது கலைகள்!" என்ருர்;
பிறந்தது முதலே, கண்ணீர்
சொரிந்தது, அன்றே வேளார்!

# 32

## மணங்கொளச் சம்மதமோ?

“துன்னலர் அஞ்சும் மார்பா?
தூய்தமிழ்ச் சேர மன்னு!
என்னையும் நண்ப னுக
ஏற்றினிர் என்னக் கேட்டுப்
பன்னவு முடியா இன்பம்
படைத்துளன், அதனு லென்றன்
கன்னலை, அழகை, உங்கள்
காளையாம் அமைச்சர் பிள்ளை

பொன்னவிர் மேனி யான்றன்
புகழ்பெறு மனையா ளாக்க
எண்ணுவன், தங்கள் எண்ணம்
எனக்கறி விக்கு மாறு
மன்னிய அன்பால் இந்த
மடலினை அனுப்பி யுள்ளேன்;
அன்னமும் அதையே எண்ணி
ஆசையில் மெழுகாய் நிற்கும்;

அண்ணலே! உங்கள் நாட்டில்
அழகியர் பலபே ருண்டு!
என்னினும் எனக்காய் உங்கள்
ஏற்பினைச் சொன்னுற், பாண்டி
மண்ணிலே பிறந்தாள் சேர
மண்டலந் தன்னில் வாழ்ந்து
நண் ணுவள் பெரும்பே ரின்பம்!
நற்பதில் எதிர்பார்க் கின்றேன்!"

இம்மடல் கண்டான் சேரன்
இனப்பகை, கொடுக்கல் வாங்கல்
தம்மிலே மறையும் என்னும்
சரித்திரம் அறிந்தா னுக
நன்மன அழும்பில் வேளை
நாள்சொலச் சொன்னுன்; அன்னுர்
தம்மகன் மறுக்கா னென்று
"சரி! ஒரு பத்து நாளில்!

திருமணம்!" என்ருர்; சேரன்,
தென்னவன் பழைய னுக்குச்
சிறுமடல் வரைந்தான்; ஒப்புஞ்
செய்தியை அறிவித் திட்டான்
முறுவல்தென் னரசிக் கின்று
முடிந்தது மணப்பேச் சென்று
உறுவன்நன் மகிழ்ச்சி மோகூர்
உரையெழிற் பழையன் வேந்தன்

# 33

## கொடுத்ததை எடுத்துப் போனான்!

(வேறு)

சூழ்ச்சியிலே ஆரியர்க்கு முன்பி றந்தோன்
சூதுநிறை மனங்கொண்டோன்; தளிவேல்! நன்னீர்
வீழ்ச்சியினைக் கவராமற் செல்லே னென்று
வேலையெலாம் செய்தான் அங் கிருந்த பேரிற்
பாழ்த்மனம் கொண்டாரைப் பொன்னால் தாக்கிப்
பக்கத்தில் இழுத்தபடி, சிறையி ருந்த
சீர்த்திருவை ஓரிரவு கவர்ந்து கொண்டான்;
திரும்பிவழி பார்க்காமற் போனான் தூரம்!

# 34

## சூதும் சூழ்ச்சியும் மோதி மறைதல்!

கவர்ந்துவரும் தளிவேலின் முன்னே, முன்னம்
கவர்ந்தவெறி நாய்க்கூட்டங் காட்சி யாகும்
இவர்ந்துவரும் குதிரையிலே இருந்த வாறே
இகல்பொருதும் இருசிறிய சேனைக் கூட்டம்
தவழ்ந்துவரும் சொல்லாளை இடுப்பில் தாங்கிச்
சண்டையிட்டான் தளிவேலன்; சிலநா ழிக்குள்
எறிந்துவிட்டுச் சண்டையிட்டான், கீழ்வி ழுந்தாள்;
இதுதான்நற் சமயமென ஓட லானுள்!

சண்டையிலே இருநாயும் மடிந்து போகத்
தலைபிழைத்த சிலபேரும் மறைந்தே போனர்
எண்டிசையும், பேராசைப் பேய்க ளுக்கே
இதுகதியென் ருேலமிடப் பொழுதுஞ் சாயும்
கண்டனையாள் ஓடினுள் வெகுதூ ரத்தில்
காரிருளில் வழிமாறி எங்கோ சென்ருள்
அண்டையிலோர் குடில்தோன்ற அங்கே சென்று
ஆறினுள் வாசலிலே துயில்ம டுத்தாள்

விடியுமுனம் எழுந்தாள், மெய்வலியும், மேனி
வெலவெலக்கும் பசியுமாய் நடந்தாள்; வண்ணக்
கடிமலராள், பெண்குலமே காணுப் பாடு
காதலுக்காய்ப் பட்டாள்,தன் னுடு நோக்கி
அடியெடுப்பாள், அயர்வாள், பின் எழுவா ளாக
அசைந்துவரல் கண்டாரேல் அழுதே சாவார்
முடிவினிலே சேரத்தின் எல்லே தொட்டாள்;
முத்தமிட்டாள் மண்மீது, பறக்க லாணுள்!

## 35

## வஞ்சியிற்கொடியும் வஞ்சிக்கொடியும்

வீதியெலாம் தோரணங்கள்; மாம்பூ வாசம்
வீட்டுக்கு வீடு இதழ்ச்சிரிப்புத் தோட்டம்
நீதியருத் தென்னாட்டு வேந்தன் சேரன்
நீள்மனையிற் புதிதான அலங்க ரிப்பு
சோதிநிலாப் பெண்ணுக்கும் அடலே றுக்கும்
தொடங்குசுகம் இப்படித்தான் எனும்ப டிக்குப்
பாதைதொறும் மூங்கிலிலே கொடியைச் சுற்றிப்
பந்தல்பல போட்டிருந்தார் வஞ்சி மக்கள்

கோதையெழில் மாங்கனியாள் ஊருக் குள்ளே
குழல்விரித்தே ஓடிவந்த காட்சி கண்டோர்
“நாதியிலாப் பெண்போலும்” எனநி னைப்பார்
யாருமவள் மாங்கனியென் றறிய வில்லை
மாதைமடி மீதிட்டு அன்ன மூட்டி
வளர்த்தவளைக் காணமனம் முன்னே போகப்
பாதையிலே வந்தமகள் நின்றாள்; வீடு
பாழாகத் தாயிறந்த செய்தி கேட்டாள்!

இடிஇடித்துத் தலைமீதில் விழுந்த செய்தி
எண்ணிக்கொள்; ஒன்றென்ன உள்ளங் கூறத்
துடிதுடித்தாள் கணைபட்ட புருவைப் போல;
சோபிதத்து முகம்முற்றும் சோகம் கவ்வும்;
அடியெடுத்து வைத்தாளணுதைக் கன்னி!
அருகொருவர் தன்னைப்பார்த்து, "ஐயோ இன்று
படபடப்பாய்க் காட்சிதரும் கோல மென்ன?"
பட்டாபி ஷேகம்போல் தோற்ற லேனோ?"

கொழுந்துமகள் கேட்டிட்ட கேள்வி கேட்டு
குறுநகையில் அவ்வீரன், "திரும ணங்காண்!
அழும்பில்வேள் மகனுக்கும், மோகூர்ச் செல்வி
அழகியதென் னரசிக்கும்!" என்றான்; பெண்ணைக்
கழுவில்தா னேற்றிவிட்ட தறியாப் பாவி;
கன்னிஉடல் அடியற்ற மரமாய்ச் சாய்ந்து,
வழியில்தான் சாகாமல் வந்த தற்காய்
வண்ணாத்திப் பூச்சிமனம் பதைப தைக்கும்;

உயிர்கைக்குள் அடங்கிவிடப் பிடித்துக் கொண்டு
உடற்காற்றில் ஆடிவரத் தவழ்ந்து வந்து
மயிலிறகின் அடிக்குருத்துக் கழுத்தில், வீரன்
மாலையிடும் காட்சியினைக் கண்ணுற் கண்டாள்;
மெயிற்பாதி இல்லையென மெலிந்த மேனி,
வெளிறுமுகம், காணாத அடலே றண்ணல்
கரந்தூக்கி மலர்மாலை சூட்டு கின்றான்
கருவிழித்தென் னரசிமனம் இன்பம் பாட,

"பிப்பீ!"என் ருர் நாதஸ் வரத்துக் காரர்
பெருந்தட்டுத் தட்டிட்டார் மேளக் காரர்
எப்போதும் போலிருந்தார் ஒத்துக் காரர்
எல்லோரும் கைதட்டி ஆர்ப்ப ரித்தார்
சுப்பலிடைக் கோடரிவங் தடித்த தென்னத்
தூள் தூளாய் மனம்போனுள் காதற் கன்னி
தெப்பமென அடலேறைக் கூர்ந்து பார்த்தாள்
சிரிப்பல்ல கண்ணீரே அங்கும் கண்டாள்!

காதல்கண் ணீர்சொரிய மணமு டித்துக்
கலேகாணத் துவங்குங்காற் கொன்றை யூரின்
மாதரவர் தங்கம்வை ரம்என் பார்கள்
வட்டமிட்டு மண்மிதித்து நடன மிட்டார்
கோதைமாங் கனியாடிக் குளிர்ந்த நாட்டில்
கோடைபாழ் மரங்களென அவர்கள் ஆடி
"தாதைத்தா!" எனக்காலேக் கெடுத்துக் கொண்டார்;
சந்தோஷ முகங்களேயும் கெடுத்தார்; போனுர்!

மணமக்கள் புறம்போகக் கூட்ட மெல்லாம்
வந்தவழி ஏகிவிட; பந்த லுக்குள்
பிணமொத்த மாங்கனியே நின்ருள் உள்ளம்
பேதித்துப் பைத்தியமாய்; காவல் வீரர்
"இனியொன்றும் பரிசில்லே! போ, போ!" என்ன
' என்பரிசு எனக்கில்லே!" என்றே நாவின்
நுனிவரையில் வந்ததனே அடக்கிக் கொண்டு
நூலுக்குக் கால்முளேத்தாற் போலச் சென்ருள்.

## 36

### கன்னிக்கு முதல் இரவு

மெல்லியநற் பட்டாலே மெத்தை தைத்து
மேலுமொரு பட்டாலே அதனை மூடி
மல்லிகைநன் மலர் தூவி அதைம றைத்து
வாசனைகள் அறையெல்லாம் தூவி விட்டு
மெல்லியுடன் அடலேறு விளங்கப் போகும்
வேதனையில் லாப்போரின் முதல்நா ளென்று
துல்லியமாய் அலங்காரம் செய்து வைத்துச்
சொர்க்கமெனுங் கற்பனைக்கு உருச்ச மைத்தார்.

பாங்கியர்கள் தென்னரசிப் பாவை முன்னம்
பலகதைகள் சொல்லுகிறார்; தங்கள் வீட்டில்
தூங்குதல்போல் நடித்ததுவும், ஆளன் வந்து
தொட்டதுவும் பிற்பாடு நடந்த யாவும்...
தாங்குமலர் வண்டுண்ணத் தளர்வு கொண்டு
தடங்கையால் அணைத்ததுவும், விடிந்த பின்னர்
ஆங்குவளர் நகக்குறியைக் கண்டு கண்டு
அயிர்த்ததுவும் சொல்லிச் சூடேற்று கின்றார்

"கண்களுக்குள் தென்றல்புகும் என்றிருப்போம்,
கண்களைத்தன் இதழாலே மூடி வைப்பார்;
காதுகளில் தென்றல் புகும் என்றிருப்போம்,
காதையும்தன் இதழாலே சுட்டு வைப்பார்;
மெல்லிதழைத் தென்றல்தொடும் என்றிருப்போம்,
வெடுக்கென்று வலியேறச் செய்து வைப்பார்;
கன்னங்கள் காற்றுக்குத் தெரியா வண்ணம்
கைபோர்த்தி முகமுற்றும் மறைத்துக் கொள்வார்.

துகில்போர்த்த மலையுச்சி...ஐயோ, வெட்கம்!
சொல்லேன்" நான் என்றொருத்தி அநுப வத்தை
ஒயிலாக அபிநயத்தில் சொல்லக் கேட்டு
உயிரெல்லாம் சூடேறக் கன்னி நின்றாள்;
குயிலாக மற்றொருபெண் தனது ஆளன்
கொண்டதுவும் கொடுத்ததுவும் சொல்லிச் சொல்லி
மயிலாக நடித்திட்டாள்; கேட்கக் கேட்க
மாதுக்கு வரப்போகும் சுகமும் தோன்றும்

"பயிலாத வித்தைக்குப் பள்ளி என்றே
படுக்கையினைப் 'பள்ளி' எனச் சொன்னார் போலும்"
அறியாத புதுக்கன்னி, இவ்வா றெண்ணி
அதிசயித்தாள், நேரத்தை, யுகமாய்க் கண்டு!
'வருவாரா? பாங்கியர்கள் போமாட் டாரா?
மார்புக்கும் முகத்துக்கும் இனுமேன் தூரம்?
தருவாரோ நல்லமுதம்?" எனவு யிர்த்துத்
தரையினிலே நில்லாமற் காற்றில் நின்றாள்

அனுபவத்தின் முழுஏடு போலே வந்தாள்,
அடுக்கடுக்காய்த் திரைகொண்டோர் கிழவி ஆங்கு;
மினுமினுக்கும் முகப்போடு அவளைப் பார்த்து
'விருந்துக்கு அடைப்புத்தான்!'' எனநினைத்துக்
குறுகுறுப்புப் பொறுக்காமற் ''பாட்டி!'' என்று
கூப்பிட்டு, ''என்னையா தேடுகின்றாய்?
இருக்கின்றேன் இங்குதான்'' என்றாள்; உள்ளம்
எல்லோரும் தெரிந்தார்கள்; சிரித்து விட்டார்!

தொட்டாற்சுருங்கியெனச் சிரிப்புக் கேட்டுச்
சோதிமுகம் நாணத்தாற் சுருங்கிப் போக,
''முட்டாள்நான்! உளறிவிட்டேன்!'' எனமயங்கி
மூடினாள் கைமலரால் முகத்துப் பூவை;
எட்டாத தூரத்தில் இல்லை யேனும்
ஏனோதான்? அவள்மனது பொறுக்க வில்லை
''கட்டாது இனி!'' என்றக் கிழவி வந்து
கைதொட்டுக் கொண்டுபோய் அறையில் விட்டாள்.

நினைவென்னும் நெருப்போடு உள்ளே வந்து
நின்றாள்;அங் கடலேறு படுத்திருந்தான்!
சுனைதன்னில் ஒளிமின்னும் காட்சி போலும்
சுடர்மார்பன் தனைப்பார்த்தாள், தலைகுனிந்தாள்;
மனம்முன்னும் கால்பின்னும் உடலை ஆங்கே
வார்த்துவிடப் புரியாமல் நின்றாள் பேதை,
கனவெல்லாம் மாங்கனியாய், இருக்கும் மெத்தை
காணாமல் நிலைவிழியில் அவனிருந்தான்

அழைப்பான்என் றெதிர்பார்த்தாள்: வார்த்தை யில்லை
அடிக்கடிஅம் முகம்பார்த்தாள்; பூமி பார்த்தாள்;
பிழைப்பாடு நாம்என்ன செய்தோ மென்று
பேச்சற்றுப் பரிதாப மாக நின்ருள்;
குழைவோடு தன்னூரில் ஓரி ராவில்
கொஞ்சிஇசை பாடியதை நினைத்துக் கொண்டு
பழிகார நாணம்அன் றில்லை; இன்று
படையெடுத்து விட்ட துவே என்ற யிர்த்தாள்

திடமாக மனமதனைத் திருத்திக் கொண்டு
சிலம்போசை அடிஎண்ண நடந்து வந்து
"குடமாகத் தேனேடு நானுமிங்கே
குளிர்காற்றும் பக்கத்தில்; என்த யக்கம்?
விடமாநான்" எனக்கூறும் பாணி தன்னில்
வெண்மனதுப் பெண்பாவை அவனைப் பார்த்தாள்
சடமாகக் கிடந்த அவன், கனவைவிட்டுத்
தடமாறிக் காட்சிக்கு வந்தான்; கண்டான்!

குவளைமலர் விளிம்பில் ஒரு பனிமுத் துப்போல்
கொதிகண்ணீர் ஊறும்சுகக் கடலைக் கண்டான்!
"திவலைவரச் செய்தோமே! பாவம்! இந்தச்
சிறுபயிர்தான் என்செய்யும்? நந்தம் உள்ளம்
கவலையெனில் அதைத்தீர்க்க இவளென் செய்வாள்?
கட்டியபின் மாலைதனைக் கழற்றல் ஆமோ?
கவலைமனம் எனக்"கென்று கையைத் தொட்டுத்
தன்பக்கம் உட்கார வைத்துக் கொண்டான்

சின்னமுகம் தொட்டான்; மாங் கனியை எண்ணிச்
சிட்டுமுத்தம் வைத்தான்; மாங் கனிதா னென்று
பின்னும்இதழ் உண்டான்; மாங்கனிபோல் எண்ணிப்
பெண்மடியிற் சாய்ந்தான்; ''மாங்கனியே!'' என்று
கன்னல்மொழி சொன்னான்; மாங்கனிநா மென்று
கட்டழகி சிரித்தாள்; மாங்கனிசேர் கன்னம்
தன்னேவடுச் செய்தான்; மாங் கனியாய்க் கட்டித்
தன்மார்பில் சேர்த்தான்இச் செகம்ம றந்தான்!

தென்னரசி மேனியில்மாங் கனியைக் கண்டு
தெவிட்டாமல் அள்ளிஅள்ளி உண்ட காளே,
மின்னலிடை தன்னிற்கை வளைத்த வாறு
மெய்ம்மறந்து பட்டணையிற் சாய்ந்தி ருக்கக்
கன்னிஅவள் கன்னத்திற் கன்னம் வைத்துக்
கை, தலையைக் கோதியவா றன்புக் காட்டிற்
பொன்னெடுத்துக் கண்மூடிப் புவிம றந்தே
புதுவார்த்தை பலகூறித் தமிழ்வ ளர்த்தாள்!

சிறுகுன்றை வெண்மேகம் மூடல் போலும்,
சிலைதன்னைத் துகில்கொண்டு மறைத்தல் போலும்
இருகுன்றம் தலைகீழாய்க் கவிழ்ந்து பூமி
இடைச்செல்ல முயல்கின்ற காட்சி போலும்
மருவொன்றும் இல்லாத தந்தப் பேழை
வைரத்துட் புதைந்துள்ள தன்மை போலும்
ஒரு அன்றில் மற்றொன்றைச் சிறகு கொண்டே
ஒருவர்க்கும் தெரியாமல் மறைத்தல் போலும்

ஒருமேனி மற்ருென்றில் ஒதுங்கிப் போக,
ஒருவர்தான்; மற்ருெருவர் எங்கே என்று
புரியாமற் பார்ப்போர்கள் அதிச யிக்கப்
புனலோடு புனலாக அவனேக் கன்னி
தெரியாமற் மறைத்துத்தன் தேனு தட்டைத்
தேய்க்கின்ருள் தேய்க்கின்ருள் மாறி மாறி
இரைகொண்ட கோழிதன் மூக்கைக் கல்லில்
இப்படியும் அப்படியும் தேய்த்தல் போலே!

# 37

## தானின்றிக் காதல்—தான் கண்டாள்!

நினைவுக்கு விடைதந்து, கனவில் மட்டும்
நிற்கின்ற பெண்ணுள்மாங் கனியாள் வந்தே,
ஒருவர்க்குந் தெரியாமல் சுவரி லேறி
உள்வந்து, சன்னற்பின் புறத்தே ஊன்றித்
தனிமைக்குள் உடல்வேக நின்றாள்; அங்கே
தழைசுற்றிக் கிடக்கின்ற கோட்டை கண்டாள்;
அணைவுக்கும் சுகத்துக்கும் மூச்சு வாங்கி
அன்புநடம் பயின்றாரின் தோற்றம் கண்டாள்

அழவில்லை; ஆனாலும் அமைதி யில்லை;
அடிமண்ணும் சுடும் ஆங்கே தீக்கங் கில்லை;
பழத்தோட்டம் சருகாக நின்றாள்; காதல்
படிப்பாரைப் பார்க்கமனம் பொறுத்தி டாது
அழுத்திட்ட பெரும்பாரம் தாளா தாக
"அத்தான்!" என் றாள்தன்னை அறியாப் பேதை,
எழுந்திட்டான் அடலேறு; "என்ன?" என்றாள்
இனியசுவைத் தென்னரசி; பதில்சொல் லாது,

"மாங்கனி!"என் ருன்கூவி அதற்குள் அந்த
மாஞேதன் தவறெண்ணி வெளியில் வந்து
"தீங்குசெய்தோம்?" என்றபடி ஓடும் காட்டுத்
திடல்நோக்கி; அடலேறு பின்தொ டர்ந்தே
"மாங்கனி! மாங்கனி!" என்று ஓடு கின்ருன்.
வடிவத்தென் னரசியும் பின் ஞேடு கின்ருள்;
ஆங்கிருந்தோர் தமக்கொன்றும் விளங்கா ராக
அசைவற்றுச் சிலையாகச் சமைந்தே போஞர்.

## 38

### சாகாத சித்திரங்கள்!

உண்ணுமல் இளைத்திட்ட மேனி முன்னும்
உயிராளன் குரலோட்டி அதற்குப் பின்னும்
பொன்னுன சுகம்அன்று கண்ட பூவை
புரியாமல் "அத்தான்" என்றைழத்த வாறும்
திண்ணும் தென்ஞட்டு மண்ணிற் பாதம்
திடும், திடும்என் றடிபோட ஓடி'ஞர்கள்
கண்ணுளன் தனை நீங்கிக் கனியாள் போனுள்.
கணவனவன் தனைக்கொள்ள அரசி போனுள்.

கழன்றுவரும் சிற்ருறு; அதற்குள் வந்து
"தொப்"பென்று மாங்கனியாள் விழவும், பின்னல்
உழன்றுவரும் அடலேறு ஓடி யந்த
உயிர்ப்பாட்டின் பின்ஞலே விழவும்; மேனி
அழன்றிடுதென் னரசிதரை மீதிற் சாய்ந்து
"அத்தான்! அத்தான்!" என்ருள்; யார்க்கும் கேட்கும்
கழன்றதுகா தல்வண்டிச் சக்கரங்கள்,
காஞற்றின் உட்புறத்தில் தவித வித்தார்!

(வேறு)

தென்னரசி

"ஒருநாள் ஒளியை என்முனம் காட்டி
உயிரே! எங்கே பறக்கின்றீர்?"

—ஆற்றில்—

ஆறுசு ழன்றது; மாங்கனி கூவினள்
அடலே றவளைத் தேடுகிருன்!

தென்னரசி

"திருநாள் அறிந்தேன்! மறுநாள் இலையோ!
சித்திரமே! எங்கேகு கின்றீர்?"

—ஆற்றில்—

வீறு மிகுந்தது; ஆறு சுழன்றது
வீரனும் காதலி தனைத்தொட்டான்!

தென்னரசி

"அத்தான்! அத்தான்! அன்பின் கடலே!
அமுதே! எங்கே மறைந்தீரோ!"

—ஆற்றில்—

தொட்ட மெய் மாங்கனி வாயித ழோடு தன்
சுவைஇதழ் சேர்த்துக் கயிருகக்
கட்டி அணைத்தான்; ஆறு சுழன்றது;
காதலர் ஆற்றின் அடிப்போனர்

## தென்னரசி

துடிக்கும் ஜீவன் இங்கே அத்தான்!
தூய மேனி எங்கே?
துவளும் உள்ளம் இங்கே; அத்தான்
தொடரும் எண்ணம் எங்கே?

அத்தான்! அத்தான்!
அத்தான்! அத்தான்!

காற்ருேடு குரல் கலந்தது!
கண்மூடி உயிர் பறந்தது!
ஆற்ருேடு எழில் மறைந்தது!
ஆனுலும் பொழு தலர்ந்தது.

# 39

## செத்து நடந்த பகல்

(வேறு)

புலர்ந்தது பொழுது, மூவர் போயின ரென்னக் கூறி,
அலர்ந்தது மணமில் லாத ஆம்பற் பூப்போற் காற்றுக்
கிளர்ந்தது; ஆனல் அங்கே கிளர்ச்சிகொள் மூவரில்லை
தொடர்ந்தது காலம், காதற் சுகக்கலை இல்லா தாக!

## 40

## புத்தர் வழியிற் பொன்னரசி

(வேறு)

பொன்னரசி புத்தர்வழிச் சேர்ந்து விட்டாள்
பொழுதெல்லாம் புத்தர்புகழ் பரப்பு கின்ருள்
தென்னரசி, அடலேறு, மாங்க னிப்பெண்
சேர்ந்துஉயிர் நீத்தகதை உலகமெங்கும்
இன்னமுதம் கூறுகிருள்; சேரநாட்டில்
இணையில்லாக் காதலிது நடந்த தென்று!
தென்மொழியும் தென்னுடும் தென்னர் பண்பும்
செழித்துலகம் புகழ்பாட வாழி! வாழி!

''புத்தம் சரணம் கச்சாமி!
தர்மம் சரணம் கச்சாமி!
சங்கம் சரணம் கச்சாமி!''



